

# CHANDAMAMA

PRESENTS

## "BE A DREAM CHILD" CONTEST

The President of India, Dr. A.P.J.Abdul Kalam, in the course of his interaction with children, has been exhorting them to DREAM for the future of India and its people. Recently, at the end of his address to the nation on January 25, he administered an oath to a group of children. For the sake of our young readers, the 10-point oath is reproduced below.

1. I will pursue my education or work with dedication and I will excel in it.
2. I will teach at least 10 illiterate persons to read and write.
3. I will plant at least 10 saplings and shall ensure their growth through constant care.
4. I will visit rural and urban areas, and permanently wean away at least five persons from addiction and gambling.
5. I will constantly endeavour to remove the pain of my suffering brethren.
6. I will not support any religious, caste or language differentiation.
7. I will be honest and will endeavour to make a corruption free society.
8. I will work for becoming an enlightened citizen, and make my family righteous.
9. I will always be a friend of the mentally and physically challenged and will work hard to make them feel normal, like the rest of us.
10. I will proudly celebrate the success of my country and my people.

Chandamama invites the children of India to write one para each about what they have achieved in fulfilling the ten points by the next Independence Day. The contest is open to children between 8 and 15.

ENTER THE CONTEST AND WIN ATTRACTIVE PRIZES!

THREE BEST ENTRIES WILL BE PUBLISHED IN OUR NOVEMBER 2004 ISSUE.

CLOSING DATE : August 31 2004

Watch for instructions and details of prizes in the May 2004 issue

# அவர் நம்முள் உறைகின்றார்

**தொ**ண்ணூற்றிரெண்டு ஆண்டு களுக்கு முன்னால், ஆந்திர மாநிலத்தில் கடப்பா மாவட்டத்தில் பொட்டிப்பாடு என்னும் மிகச்சிறிய கிராமத்தில் ஒரு சிறுவன் இருந்தான். அவன் படித்து வந்த அவனுடைய கிராமத்துப் பள்ளியில் ராமாயணம், மகாபாரதம், பாகவதம் போன்ற புராணங்கள் மட்டுமே கற்பிக்கப் பட்டன. இந்தப் புராணங்களின் மூலமாக கற்றுக் கொண்ட நேர்மை வழி நடத்தல் அவன் மனதில் வெகு வாகப் பதிந்தது.

நாகி ரெட்டி என்ற பெயர்கொண்ட அந்தச் சிறுவன் பிற்காலத்தில் மதராசுக்குச் (இப்போது சென்னை) சென்று, அங்கு தன் பள்ளிப் படிப்பைத் தொடர்ந்தான். அவன் பள்ளிப் படிப்பை முடிப்பதற்கு முன்னமே, தங்கள் குடும்பத் தொழிலான ஏற்றுமதி வியாபாரத்தில் ஈடுபட நேர்ந்தது. இளைஞன் ஆன பிறகு, காதி, இயக்கத்தில் முழுமனதுடன் அவர் ஈடுபட்டார். இதற்குள், வியாபார நிமித்தமாக அவருக்கு பர்மாவுக்குச் செல்ல நேரிட்டது. பர்மாவில் அவர் நடத்தி வந்த வியாபாரத்தில் மிகுந்த நட்டம் அடைந்ததால், தாய்நாடு திரும்பி ஒரு புத்தகம் அச்சிடும் இயந்திரத்தை நிறுவி, புத்தகப் பதிப்பாளராக தனது புதிய வாழ்க்கையைத் தொடங்கினார்.



திரு. நாகி ரெட்டி
2 டிசம்பர் 1912 -
25 பிப்ரவரி 2004

சமூக அரசியல் பத்திரிக்கையான 'ஆந்திர ஜோதி' இதழைத் தயாரித்து வெளியிட ஆரம்பித்தார்.

அவரது வாழ்க்கையின் இந்தக் கட்டத்தில் அவருக்கு திரு சக்கரபாணி என்ற புகழ் பெற்ற எழுத்தாளரின் நட்பு கிடைத்தது. இருவருடைய முயற்சி யுடன் சந்தமாமா என்ற பெயரில் பல மொழிகளில் சிறுவர்களுக்காகப் பத்திரிகை ஒன்று துவக்கப் பட்டது.

பிறகு நாகி ரெட்டியார் தனது கவனத்தை திரைப் படம் தயாரித்தல், மருத்து வமனை நிறுவுதல் ஆகிய வற்றின் மீது செலுத்தி விஜயா - வாஹினி ஸ்டூடியோ, விஜயா மருத்துவமனைகள் ஆகியவற்றை சென்னை யில் உருவாக்கினார்.

பலதுறைகளிலும் அவரது அரிய சாதனை களைப் பாராட்டி அவர் பெற்ற பட்டங்களும், பரிசுகளும் ஏராளம்.

ஆந்திர மாநிலத்து இரண்டு பல்கலைக் கழகங்கள் அவருக்கு டாக்டர் பட்டம் அளித்து சிறப்பித்தன. அவரது லட்சியங்களின் பிரதிபலிப்பான சந்தமாமா, மனித நேயத்தின் சிறந்த அம்சங்களை நம் நாட்டுக் குழந்தைகளுக்கு எதிர் காலத்திலும் வாரி வழங்கி, தனது ஸ்தாபகருக்கு நினைவாஞ்சலி செலுத்தும் என்பதில் ஐயமில்லை.

அம்புலிமாமா

சிறப்புப் படைப்பாக மதிமுகம் : 107 ஏப்ரல் : 2004 புன்னகை : 2



மாய மந்திரவாதி 13



நவீன வேதாளக் கதை 19



இந்தியப் புராதனக் கதைகள் 24



விஷ்ணு புராணம் 45

## பொருளடக்கம்



SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**

***Remittances in favour of Chandmama India Ltd.***

Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail :
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.120/- **புக்போஸ்டில்** உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியார்டரிலோ **சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# கற்களும் கதை சொல்லும் கேளுங்கள் கவனமாய்!

நமது மதிப்பிற்குரிய ஜனாதிபதி டாக்டர் அப்துல் கலாம் அவர்கள் நம் நாட்டு இன்றையச் சிறுவர்கள் வளர்ந்து ஆற்றல் மிக்க இளைஞர்களாக மாறி நமது நாட்டை முன்னேற்றப் பாதையில் நடத்திச் சென்று கி.பி.2020ம் ஆண்டுக்குள் பாரதத்தை வலிமை மிக்க நாடாகத் திகழச் செய்வார்கள் என்று உறுதியாக நம்புகிறார். அதற்காக அவர்கள் இப்போதிருந்தே கனவுகள் காணவேண்டும் என்றும் அந்தக் கனவை நனவாக்கும் சக்தி அவர்களுக்கு உள்ளது என்றும் நம்புகிறார். இந்த நம்பிக்கையில் தான் அவர் குடியரசு தினத்தன்று நூறு சிறுவர்களை தலைநகருக்கு அழைத்து வந்து அவர்களை, ''நம் நாட்டின் மகத்தான வெற்றியைக் கொண்டாடி கர்வம் கொள்ளுவேன்'' என்று உறுதி மொழி எடுத்துக் கொள்ளச் செய்தார்.

அவரது ''கொண்டாடி'' என்ற சொல்லுக்கு ஒரு விசேஷ அர்த்தம் உள்ளது. ஒரு சாதனையைத் தொடர்ந்துதான் கொண்டாட முடியும். நமது நாட்டில் இன்று பல கொண்டாட்டங்கள் நடைபெறுகின்றன எனில், நாம் சாதனைகள் பல புரிந்துள்ளோம் என்பது தெளிவாகிறது. இந்த அரிய சாதனைகளை, நமது பழங்காலச் சிறப்புக்களை, இன்னும் நாட்டின் பல இடங்களில் கல்லில் வடித்தச் சிற்பங்களாகக் காண முடிகிறது.

இந்த பழங்கால சிறப்பிடங்களை சென்று பார்ப்பதைவிட சிறந்த கொண்டாட்டம் எதுவுமில்லை. அந்த கற்கள் சொல்லும் கதைகளை நேரிலே கேட்க முடியாவிடினும், முதலில் வகுப்பறையில் அவற்றைப் பற்றி தெரிந்து கொள்ளுங்கள். அதன்பிறகு விடுமுறை தினங்களில் சென்று பார்க்க கட்டாயம் முயற்சி செய்யுங்கள்.

*ஆசிரியர்* : **விஸ்வம்**





மொட்டு மலர்ந்ததும்...

# ஏழைப் பங்காளன்




ஒரு பிச்சைக்காரனைத் தெருவில் பார்த்தால் நாம் என்ன செய்வோம்? சட்டைப் பையைத் துழாவி, ஏதேனும் சில்லறை இருந்தால் அவனிடம் கொடுப்போம். அதற்கு மேல் ஏதாவது செய்வோமா? இதற்கு மேல் செய்ய என்ன இருக்கிறது என்று நினைக்கிறீர்களா? ஒரு ஆறு வயது சிறுவன் இந்த சந்தர்ப்பத்தில் என்ன செய்தான் என்பதை கீழ்க்காணும் கதையில் படியுங்கள்.

சிறுவன் ஒருவன் தன் தாயுடன் தெருவில் சென்று கொண்டிருந்த போது, வழியில் ஒரு பிச்சைக்காரனைக் கண்டான். இதற்குமுன் அந்தச் சிறுவன் பிச்சைக்காரர்களைப் பார்த்ததேயில்லை. முதன் முறையாக கிழிந்த உடையில் பரிதாபமான தோற்றத்துடன் ஒரு பிச்சைக்காரனைக் கண்டதும், அவன் அதிர்ச்சியுற்றான். உடனே விரைந்து சென்று அந்தப் பிச்சைக்காரனை ஆதரவுடன் அணைத்துக் கொண்டான். கண்களில் இரக்கத்துடன் அவனை பார்த்து, தனது வயதுக்கு மீறிய முதிர்ச்சியுடன் உரையாடினான். அந்தப் பிச்சைக்காரனுக்கு ஏதாவது உதவி செய்யுமாறு தன் அன்னையிடம் வேண்டினான்.

அந்தச் சிறுவனின் செய்கையைக் கண்ட தாயும், அந்தப் பிச்சைக்காரனும் ஆச்சரியத்தில் பிரமித்துப் போயினர். கண்களில் கண்ணீர் பொங்க அந்தப் பிச்சைக்காரன், சிறுவனின் தாயை நோக்கி, ''அம்மா, உங்கள் மகன் சாதாரணச் சிறுவனல்ல. இவன் பெரியவனானதும் நாட்டுக்காகவும், நாட்டு மக்களுக்காகவும் மிகப் பெரிய தொண்டு ஆற்றப் போகிறான். இவனை பத்திரமாக பாதுகாத்து வாருங்கள்,'' என்றான்.

அந்தப் பிச்சைக்காரன் கூறியது பிற்காலத்தில் பலித்தது. அந்தச் சிறுவன் வளர்ந்து பெரியவனாகி, இரக்க சுபாவம் உள்ளவனாகவும், உதவி செய்யும் மனப்பான்மை உள்ளவனாகவும் இருந்து, தன் நாட்டு ஏழை மக்களுக்குப் பெருந்தொண்டு புரிந்தான்.

நாட்டுப் பற்று மிகுந்திருந்த அவன், தன்னிதயத்தைத் திறந்து பார்த்தால் அங்கே 'இத்தாலி' என்று எழுதியிருக்கக் காணலாம் என்று பெருமையுடன் பலரிடமும் கூறுவான். ஆம், அவன்தான் இத்தாலி நாட்டைச் சேர்ந்த ஜோசஃப் மாச்சினி.



# சத்யவானின் சாமர்த்தியம்

பாக்கியபுரத்தில் சத்யவான் என்ற சிறந்த பண்டிதன் இருந்தான். எந்த ஒரு பொருளைப் பற்றியும் விளக்க மாகவும், தெளிவாகவும் பேசுவதில் அவன் வல்லவன். அவனுடைய அறிவையும், ஞானத்தையும் ஊரார் அனைவரும் புகழ்ந்தனர். அந்த கிராமத்து மக்கள் மரியாதை கொடுத்ததோடு அவனை நேசிக்கவும் செய்தனர்.

அப்போது அருகிலுள்ள நகரத்தி லிருந்து, கீர்த்திவர்மன் என்ற பண்டிதன் பாக்கியபுரத்தில் வசிக்க முடிவு செய்து, அந்த கிராமத்தை வந்தடைந்தான். கீர்த்திவர்மனுக்கு தன் திறமை மீதும் அறிவு மீதும் மிகுந்த கர்வம் இருந்தது. யாராவது அவனைப் புகழ்ந்து பேசுவது அவனுக்கு மிகவும் பிடிக்கும்.

அவன் முன்பிருந்த நகரத்தில் அவனை யாரும் லட்சியம் செய்ய வில்லை. அதனால்தான் அவன் பாக்கியபுரத்திற்கு வந்தான். கீர்த்தி வர்மன் பணம் படைத்தவன். கிராமத்தில் தனக்கென சொந்த வீடும், பெரும்பாலான நிலபுலன்களும் வாங்கிக் கொண்டான்.

கீர்த்திவர்மனின் சுபாவத்தை அறிந்து கொண்ட சிலர் அதைத் தனக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினார். கீர்த்திவர்மனை சூழ்ந்து கொண்டு, போலியாக அவன் புகழ் பாடி அவனிடமிருந்து பணம் பறிக்க முயன்றனர். இதையறியாத கீர்த்தி வர்மன் தனது மதிப்பு கிராமத்திலிருப் பவர்களுக்குத் தான் தெரிகிறது என நம்பி, புகழ் போதையில் தடுமாறி, தன் செல்வத்தைக் கரைக்கத் தொடங்கினாள்.

கீர்த்திவர்மனது மனைவி ஸ்வர்ணா நகரத்திலேயே பிறந்து வளர்ந்ததால் நாகரீகமான பெண்மணி. அவளுக்கு இந்த கிராம வாழ்க்கை பிடிக்கவில்லை. தவிர, முகஸ்துதி செய்வோருக்கு, தன் கணவன் பணத்தை வாரியிறைப்பதும் பிடிக்க

- பாக்கியஸ்ரீ போதுவால் -



வில்லை. இதையெல்லாம் நினைத்து கவலைப்பட்ட ஸ்வர்ணா, கடைசியில் தன்னுடைய அண்ணன் சுதாகரனை பாக்கியபுரத்திற்கு வரவழைத்தாள்.

சுதாகரன் தன் தங்கையின் வீடு வந்ததுமே, அங்குள்ள நிலைமையைப் புரிந்து கொண்டான். ஆனால் தன்னைவிட சற்றே வயதில் பெரியவனான கீர்த்திவர்மனைக் கடிந்து கொள்வதை விட, நல்லவிதமாகப் பேசித் திருத்துவதுதான் நல்லது என்று நினைத்தான். முள்ளை முள்ளால் எடுப்பதுபோல புகழுக்கு மயங்கும் கீர்த்திவர்மனை புகழுரையாலேயே திருத்துவதுதான் நல்லது என்றும் நினைத்தான்.

தன் திட்டத்தின் முதற்படியாக, ஒருநாள் கீர்த்திவர்மனிடம், ''ஒரு நாட்டின் உயிர்நாடி அதனுடைய கிராமங்கள் தான். ஆகவே நீங்கள் கிராமத்தில் வசிக்க முடிவு எடுத்தது மிகவும் சரியான ஒன்று. ஆனால் கிராமத்தின் முக்கிய தொழில் விவசாயம். ஆனால் நீங்களோ வியாபாரம் செய்வதில் வல்லவர். ஆகவே நீங்கள் இருக்க வேண்டிய இடம் நகரம் தான். நான் வேண்டுமானால் இங்கே தங்கி உங்களது நிலபுலன்களை கவனித்துக் கொள்கிறேன்,'' என்றான்.

ஆனால் கீர்த்திவர்மன் ஒப்புக் கொள்ளவில்லை. ''எனக்கு இங்கே புகழ் அந்தஸ்து எல்லாம் கிடைக்கிறது. ஆகவே நான் இருக்க வேண்டியது இங்குதான்,'' என்றான். இந்த பதிலை எதிர்பார்த்த சுதாகரன், ''கீர்த்திவர்மா! கிராமத்து மக்களுக்குப் பணத்தின் அருமை தெரிவதில்லை. தங்களைப் போன்ற செல்வந்தர்களைக் காட்டிலும், புலவர்களையும் கலைஞர்களையும் பண்டிதர்களையுமே மதிக்கின்றனர். இப்படிப்பட்ட மரியாதை இங்குள்ள பண்டிதனான சத்யவானுக்குத் தான் கிடைக்கும். உங்களை ஏமாற்றி பணம் பறிக்கவே உங்களைப் புகழ்கிறார்கள்,'' என்றான்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் கீர்த்திவர்மன் உணர்ச்சி வசப்பட்டு சிலிர்த்து எழுந்தான். இதுவரை சத்யவானிடம் அவனுக்கு மதிப்பு இருந்து வந்தது. ஆனால் தன் மைத்துனன் வாய் மூலமே சத்யவானின் பெருமையைக் கேட்டதும், அந்த மதிப்பு பொறாமையாக மாறி விட்டது. ''உலகில் பணம் தான்



முக்கியம். அதைக் கொண்டு எதையும் சாதிக்கலாம். எனக்கு நிகர் யாருமில்லை என்ற உண்மையை சத்யவானேதன் வாயால் அறிவிக்கும்படி செய்கிறேன் பார்,'' என்று சவால் விட்டான் கீர்த்திவர்மன். மறுநாளே கீர்த்திவர்மன் சத்யவானுக்கு, ''நான் உங்களுக்கு ஒரு பண முடிப்பு அளித்து உங்களை கௌரவிக்க விரும்புகிறேன்,'' என்று செய்தி அனுப்பினான். பதிலுக்கு சத்யவான், ''என்னை தாங்கள் எதற்காக பணத்தால் கௌரவிக்க வேண்டும்?'' என்று எதிர்க்கேள்வி கேட்டு அனுப்பினான்.

கீர்த்திவர்மனுக்கு சத்யவானின் பதிலைக் கேட்டு கோபம் வந்தது. ''இந்த சத்யவான் என்னமாதிரியான ஆள்? எதற்காக இப்படி என்னை எதிர்க்கேள்வி கேட்கிறான்? பணத்தையும், கௌரவத்தையும் விரும்பாத இவன் ஒரு பண்டிதானா?'' என்று சுதாகரனிடம் பொருமினான் கீர்த்தி வர்மன்.

அன்றே கீர்த்திவர்மன் சத்யவானை நாடிச் சென்றான். வீடு தேடி வந்த கீர்த்திவர்மனை சத்யவான் தகுந்த முறையில் உபசரித்து வந்த விஷயத்தைப் பற்றிக் கேட்டான்.

''சத்யவான் அவர்களே! உங்களுக்கு பணமும் பொருளும் அளித்து உதவவேண்டும் என்பது என்னுடைய விருப்பம். நீங்கள் மறுக்காதீர்கள்,'' என்றான் கீர்த்தி வர்மன். ''உங்களுடைய தாராள குணத்தைக் கண்டு மகிழ்ச்சி அடைகிறேன். நீங்கள் எதற்காக இவ்வாறு செய்ய விரும்புகிறீர்கள் என்று தெரிந்து கொள்ளலாமா?'' என்றான் சத்யவான்.

இந்தக் கேள்வியால் துணுக்குற்ற கீர்த்திவர்மன், ''உங்களுக்குத் தெரிய வேண்டிச் சொல்கிறேன். என்னுடைய பெருமைகளை மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள்'' என்றான்.

''உங்களிடமுள்ள எந்த குணநலன்களைப் பற்றி நான் புகழ வேண்டும்?'' என்று கேட்டான் சத்யவான்.

''இதற்கு ஏன் இவ்வாறு பிகு செய்து கொள்கிறீர்கள்? புகழ்வது என்றால் எவ்வளவோ விஷயங்கள் உள்ளன. நகரத்தில் நான் ஒரு திறமையான வியாபாரி. ஆனால் அதையெல்லாம் விட்டுவிட்டு, கிராமத்தில் வசிக்க வந்துள்ளேன். இதிலிருந்தே என் உயர்வும் பெருமையும் தெரிய

வில்லையா?'' என்றான் கீர்த்தி வர்மன்.

''புகழை நாடி இங்கே கிராமத்துக்கு வந்துள்ளீர்கள். இதனால் எங்கள் கிராமத்துக்கு என்ன பயன்? இப்படி விஷயமில்லாமல் ஒருவரைப் புகழ்வ தால் ஒரு பயனுமில்லை,'' என்று முகத்தில் அறைந்தது போன்ற சத்யவானின் பதிலைக் கேட்டதும், கீர்த்திவர்மனுக்கு கோபம் தலைக் கேறியது.

உடனே வெளியேறி வந்த கீர்த்தி வர்மன் சத்யவானை அந்தக் கணத்தி லிருந்து தன் ஜென்ம விரோதியாக நினைக்கத் துவங்கினான்.

ஒருவாரத்திற்குப் பிறகு ஒருநாள் சத்யவான் குளத்தில் குளிக்கச் செல்லுகையில் படிக்கட்டுகளில் கால் இடறிக் கீழே விழுந்து காயம் அடைந்தான். இதைத் தொடர்ந்து நடக்க முடியாமல், சுமார் பத்து நாட்கள் படுத்த படுக்கையாகக் கிடந்தான்.

கீர்த்திவர்மன் இந்த சந்தர்ப்பத்தைத் தனக்கு சாதகமாகப் பயன்படுத்த எண்ணி, கிராமத்தார்களிடம் ''நான் எப்போதும் நல்ல காரியங்களே செய்கிறேன். ஆகவே கடவுள் என்மீது இரக்கம் காட்டுகிறார். எனக்குப் புரிந்த தீவினைக்காக, கடவுள் சத்ய வானை தண்டித்து விட்டார்,'' என்று பிரசாரம் செய்யத் தொடங்கினான்.

இதை அறிந்த சத்யவான் கிராமத் தலைவரிடம் சென்று ''கீர்த்திவர்மன் என்னை அகம்பாவம் பிடித்தவன் என்று பலரிடமும் கூறி வந்தான். நான் அதைப் பொருட்படுத்தவில்லை. ஏனெனில் ஒவ்வொருவருக்கும் தனக்



கென்று அபிப்பிராயங்கள் கொள்ள உரிமை உள்ளது. ஆனால் இப்போது எனக்குத் தற்செயலாக நடந்த விபத்து கடவுள் எனக்குக் கொடுத்த தண்டனை என்று அவன் எல்லோரிடமும் கூறுவதை என்னால் பொறுக்க முடிய வில்லை. ஆகவே நீங்கள் இதை விசாரணை செய்து தீர்ப்பளியுங்கள்,'' என்றான்.

கிராமத்தலைவரும் அம்மன் கோயிலின் வாசலில் விசாரணைக்கு ஏற்பாடு செய்தார்.

அம்மன் கோயிலின் முன்பாக கீர்த்திவர்மனும், சத்யவானும் ஆஜராக கிராமவாசிகள் தலைவர் உட்பட பலரும் நிறைந்திருந்தனர். கீர்த்திவர்மன் எல்லோர் முன்பாக வும், ''என்னிடம் மோசமாக நடந்து கொண்டவனை, அம்மன் தண்டித்து விட்டாள். தனது அடங்காத செய்கை யின் விளைவாகத்தான் சத்யவானுக்கு இந்த விபத்து நேர்த்தது,'' என்று முழங்கினான்.

இதற்கிடையில் திடீரென்று சத்யவான், ''கீர்த்திவர்மனின் குற்றச் சாட்டில் உண்மை உள்ளது. தன்னைப் புகழ்ந்து பேசவேண்டும் என்று அவன் என்னைக் கட்டாயப் படுத்தி னான். ஆனால் பணத்துக்காக வேண்டி, ஒரு குணநலனுமில்லாத அவனைப் புகழ எனக்கு விருப்ப மில்லை. இந்தக் குற்றத்திற்காக அம்மன் என்னை தண்டித்து விட்டாள் என நினைக்கிறேன்'' என்று எல்லோர் முன்னிலையிலும் உண்மைகளைப் போட்டு உடைத்த சத்யவான், ''ஆகவே அம்மனைத் தொந்தரவு செய்ய வேண்டாம்,'' என்று கூறி முடித்தான்.

உண்மையையறிந்த அனைவருக் கும் சத்யவான் மீது பரிவும், கீர்த்தி வர்மன் மீது கோபமும் இளக்காரமும் ஏற்பட்டது. எல்லோரும் கீர்த்தி வர்மனை ஏச ஆரம்பிக்க கீர்த்தி வர்மன் அவமானத்தால் குன்றிப் போனான். குனிந்த தலை நிமிராமல் வெளியேறிய கீர்த்திவர்மன் தனது நிலபுலன்களை தனது மைத்துன னிடம் ஒப்படைத்து விட்டு, நகரத்தை நோக்கிச் சென்றவன் மீண்டும் அந்த கிராமத்தை நோக்கி காலடி எடுத்து வைக்கவேயில்லை.





# மாய மந்திரவாதி

## 5

*(மன்னன் ஜிதகேதுவை நோக்கி மந்திரவாதி தன்னுடன் காளிவர்மன், அமைச்சர் ஜீவகுப்தன், தலையாரி மற்றும் பல வீரர்களை அழைத்துக் கொண்டு செல்லும் போது, வழியில் எதிர்ப்பபட்ட அயல் நாட்டு மன்னன் துன்முகனின் சில படைவீரர்கள் அவர்களை வழி மறித்து துன்முகனின் முன்னே நிறுத்தினர். மந்திரவாதி தன் மந்திரத் தடியால் தலையாரியைத் தொட்டவுடன் அவன் கரடியாக மாறி கையில் கோடாலியுடன் பயங்கரமாக உறுமிக் கொண்டு துன்முகன் மீது பாய்ந்தான். அதற்குப் பிறகு....)*

திடீரெனத் தலையாரி கரடியாக மாறி கையில் கோடாலியுடன் தன்னைத் தாக்க வந்ததைக் கண்டு, துன்முகன் திடுக்கிட்டான். துன் முகனைக் காப்பாற்ற வந்த அவனது மெய்க்காப்பாளர்களை மாயக்கரடி உதைத்துத் தள்ளிவிட்டு துன்முகனை நோக்கி வேகமாக முன்னேறியது.

இதைக் கண்ட துன்முகன் பயந்து போய் ''அடேய்! எனது மெய்க் காப்பாளர்கள் எங்கே! நமது படைவீரர்கள் எங்கே! இந்தக் கரடியைக் கொன்று என்னைக் காப்பாற்றுங்கள்,'' என்று அலறிக் கொண்டே, உயிருக்கு பயந்து ஓடிப் போய் தன் குதிரையில் ஏறிக் கொண்டான். ஒரேயொரு மெய்க் காப்பாளனும் துன்முகனுடன் ஓடி வந்து மற்றொரு குதிரைமீது ஏறி துன்முகன் கூடவே விரைந்து



சென்றான். அவன் துன்முகனை நோக்கி, ''அரசே! நம்முடைய படைவீரர்கள் எல்லாம் நதிக் கரையில் உள்ளனர். விஷயமறிந்து அவர்கள் இங்கு வருமுன், இந்தக் கரடி நம்மைக் கொன்றுவிடும் போலிருக்கிறது. ஆகவே நாம் அதிவேகமாக ஓடித் தப்பித்துக் கொள்வோம்,'' என்றான்.

இவ்வாறு அவர்கள் தப்பித்து ஓடிக் கொண்டிருந்ததைப் பார்த்து காளி வர்மன், ''மந்திரவாதி! ஓடுகின்ற துன்முகன் அவனை துரத்துகிற கரடியிடம் சிக்கிக் கொள்வான் என்று எனக்குத் தோன்றவில்லை,'' என்றாள்.

அதற்கு மந்திரவாதியும், ''காளி வர்மா! கரடியிடம் அவன் சிக்கா விட்டால் என்ன செய்வது என்பதை நாம் பிறகு பார்த்துக் கொள்வோம்,'' என்று கூறிவிட்டு அங்கு எஞ்சி இருந்த துன்முகன் அமைச்சரையும் மற்றும் சில வீரர்களையும் நோக்கி, ''நீங்கள் எல்லாம் சந்திரசிலா நகரத்தின் மீது போர் தொடுக்க வந்து இருக்கிறீர்கள் அல்லவா! உங்களது படை எங்கே? என்று கேட்டான்.

அங்குள்ள வீரர்களில் ஒருவன் மிகவும் பணிவுடன், ''ஐயா, எங்களுடைய படைவீரர்கள் நதிக் கரையில் அமைர்ந்து, தங்கள் ஆயுதங்களை கூராக்கிக் கொண்டிருக்கிறார்கள்,'' என்றான்.

இதைக் கேட்டு சிரித்த மந்திரவாதி பிறகு அமைச்சர் ஜீவகுப்தனை நோக்கி, ''ஐயா, மந்திரியாரே! தங்கள் வீரன் சொல்வதை செவிமடுத்துக் கேட்டீர்களா?'' எனக் கிண்டலாக வினவினான்.

''மந்திரவாதி அவர்களே,'' என பணிவுடன் விடையிருத்த ஜீவ குப்தன் ''இங்கு நடப்பதையெல்லாம் பார்த்தால் நான் பைத்தியமாகி விடுவேன் எனத் தோன்றுகிறது,'' என்றான்.

அப்போது வெகு தொலைவில் நகர்ந்து வரும் உருவங்களைக் கண்ட காளிவர்மன், ''மந்திரவாதி, ஏராள மான படைவீரர்கள் நம்மை நோக்கி வந்து கொண்டு இருக்கின்றனர்,'' என்று கூறி தன் உறையிலிருந்து வாளையுருவி, தன் பக்கத்தில் நின்று கொண்டு இருந்த ஜிதகேதுவின் வீரர்களுக்கும் எச்சரிக்கை செய்தான்.

அங்கு கூடியிருந்த துன்முகனின் எஞ்சிய வீரர்களை நோக்கி

மந்திரவாதி, ''நீங்கள் கவனமாகக் கேளுங்கள். உங்களில் ஒருவன் உங்கள் படைத்தலைவரிடம் சென்று பயந்து ஓடிப்போன உங்கள் அரசனது நிலைமையைக் கூறி எச்சரிக்கை செய்யுங்கள். அதையும் மீறி அவர்கள் யாரேனும் எங்களைத் தாக்கத் துணிந்தால், உங்களையெல்லாம் புலிகளாக மாற்றி, அவர்களை மான்க ளாக்கி, உங்களுக்கு இரையாகச் செய்துவிடுவேன் என்று சொல் லுங்கள்,'' என்றான்.

துன்முகனின் அமைச்சரும், அவனது வீரர்களும் அதிர்ச்சி யுற்றனர். அவர்களில் ஒருவன் மெதுவாக முன்சென்று, படைத் தலைவரிடம் சென்றான். ''படைத் தலைவரே! நம்முடைய மன்னர் திரும்பும்வரை, நாம் இந்த மந்திர வாதியின் சொற்படி நடப்பதுதான் நல்லது,'' என்றான்.

இதைக் கேட்டவுடன் கடுங் கோபம் கொண்ட துன்முகனின் படைத்தலைவன் தன்னுடைய வீரர்களை நோக்கி, ''நீங்கள் இவன் சொல்வதைக் கேட்டீர்களா? இதெல்லாம் வெறும் மாயாஜாலம் என நினைக்கிறேன். நாம் அனை வரும் ஒன்று சேர்ந்து இவர்களைத் தாக்கிக் கொல்ல முடியாது என்று நினைக்கிறீர்களா?'' என்று சீற்றத் துடன் கேட்டான். வீரர்களில் ஒருவன் மட்டும், ''ஐயா, அதற்குள் இவர் தன் மந்திர வித்தையை காட்டிவிட்டால், நம் கதி என்ன ஆவது? இது கொஞ்சம் யோசிக்க வேண்டிய விஷயம்,''



என்று பணிவாகக் கூறினான். இதைக் கேட்ட ஒரு வீரன் முன் வந்து, ''ஐயா, நாம் துன்முக மன்னரின் பணி யாட்கள். தேவையானபோது அவருக் காக நாங்கள் எங்கள் உயிரையும் பொருட்படுத்தாமல் போர் புரியத் தயாராய் உள்ளோம். ஆனால் நமது மன்னர் இப்போது உயிருடன் இருக்கின்றாரா என்று தெரிய வில்லையே! இவர்கள் கூறுவது போல், அந்த மாயக்கரடி இந்நேரம் நம் மன்னரைக் கொன்றிருந்தால், நாம் மட்டும் போரிட்டு உயிர் துறப்பதால், என்ன பயன்?'' என்றான்.

இதைக்கேட்ட துன்முகனின் படைத்தலைவனுக்கு திடீரென ஒரு பேராசை தோன்றியது. உண்மை யாகவே கரடி நம்மன்னரை கொன்று விட்டால், அடுத்தது நாம் அரியணை



யைக் கவரலாமே! இப்போது ஏன் மந்திரவாதியுடன் மோத வேண்டும் என்று தோன்றியது. இவ்வாறு தனக்குள் மகிழ்ச்சியடைந்து அதை வெளிக்காட்டாமல், ''நீங்கள் சொல்வது சரி. நாம் நமது திட்டத்தை கைவிட்டு, உதயகிரி திரும்பிச் செல்வோம்,'' எனக் கூறினான்.

இதைக்கேட்ட மந்திரவாதி காளி வர்மனை நோக்கி, ''காளிவர்மா! உன்னை இக்கணமே துன்முகனின் படைக்குத் தலைவராக நியமிக் கிறேன். இப்போது அந்தப் படைத் தலைவனை தன் வீரர்களுடன் உன்னிடம் சரண் அடையச் சொல்,'' என்றான்.

காளிவர்மன் ''படைத்தலைவரே! நீங்களும், உங்கள் வீரர்களும் தங்கள் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டுச் சரண் அடையுங்கள்,'' என்றான். துன் முகனின் படைத்தலைவன் இதை சற்றும் எதிர்பார்க்கவில்லை. உடனே சாமர்த்தியமாக, ''மந்திரவாதி, நாங்கள் இப்படிச் செய்வதால் எங்கள் மன்னருக்கு துரோகம் செய்தவர்கள் ஆகிறோம். புத்திசாலியாகிய நீ இவ்வாறு சொல்லலாமா?'' என்றான்.

''மிக நல்ல கேள்வி,'' என்று போலியாக பாராட்டிய மந்திரவாதி, ''தன்னுயிருக்கு பயந்து உங்களை எல்லாம் நிர்க்கதியாக இப்படி விட்டுவிட்டு ஓடிய உங்கள் மன்னன் செயல் ராஜ துரோகமில்லையா?'' என்று பதிலுக்குக் கேட்டான். தொடர்ந்து, ''நான் சொல்வதை நம்பாவிட்டால், இப்போது காட்டு கிறேன் பாருங்கள்,'' என்று சொல்லி, அவர்களில் ஒரு வீரனை கைப்பிடித்து இழுத்த மந்திரவாதி, படைத் தலைவனுக்கு அவன் முதுகுப்புறம் தெரியுமாறு திருப்பினான். ''நான் செய்யும் மந்திரத்தால், இவன் முதுகில் ஒரு காட்சி தெரியும். உங்கள் மன்னனின் நிலை என்ன என்று நீங்கள் பார்க்கலாம்,'' என்றான்.

அந்த வீரனின் முதுகில் தெரிந்த காட்சியைக் கண்டு துன்முகனின் படைவீரர்கள் ஆச்சரியத்தில் மூழ்கினர். அவர்கள் மன்னன் குதிரை மீது அதிவிரைவாக செல்வதும், அவனைத் துரத்திக் கொண்டு கரடி ஓடி வருவதும் தெரிந்தது. திடீரென ஒரு மரத்தின் பின் பக்கத்திலிருந்து ஒரு யானை மன்னனைத் தாக்க

முற்பட்டது. காட்டு யானையைக் கண்டு அஞ்சி அலறிய மன்னன், வேறு திசையில் தப்பிச் செல்ல முயன்றான்.

இப்போது யானை மன்னனை விட்டுவிட்டு மன்னனைத் துரத்திக் கொண்டு வந்த கரடியை தன் தும்பிக்கையால் தாக்க முற்பட்ட போது கரடி தனது கோடாலியால் யானையின் தும்பிக்கையை பாதியாக துண்டித்து விட்டது. பெருங்கூச்சலுடன் கரடி யானையின் முதுகில் தாவியேறி, தன் கோடாலியை வீசிக் கொண்டே, ''துன்முகன் எங்கே? துரத்து அவனை! பிடி அவனை!!'' என்று கத்திக் கொண்டே யானை மீது அமர்ந்து துன்முகனை துரத்தியது.



இதற்குள் துன்முகன் கரடியுடன் சேர்ந்து யானையும் தன்னை துரத்துகிறது என்று எண்ணி, முன்னிலும் வேகமாக குதிரையை செலுத்தினான். கூடவே குதிரையில் வந்த அவனது மெய்க்காப்பாளன், ''அரசே, நாம் பாதை தவறி, நமது நாட்டின் எல்லைத் தாண்டி வேறு எங்கோ சென்று கொண்டு இருக்கிறோம்,'' என்று மன்னனுக்கு தவறை உணர்த்தினான்.

''அட முட்டாளே! உயிரைவிட, நாட்டின் எல்லை முக்கியமாக போய் விட்டதா?'' என்று கத்திக் கொண்டே இன்னும் விரைவாக குதிரையை செலுத்தினான்.

தனது மந்திரத்தடியின் சக்தியினால் மேற்கூறிய காட்சியை இது வரை ஒரு போர் வீரனின் முதுகில் காட்டிய மந்திரவாதி, இப்போது தடியை விலக்கி ''உங்களுடைய மன்னனின் நிலைமையைப் பார்த்தீர்களா? இப்போது என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று கேட்டான். துன்முகனின் வீரர்கள் எல்லோரும் ஒரே குரலில், ''மந்திரவாதி! நீங்களே சொல்லுங்கள். நாங்கள் என்ன செய்ய வேண்டும்?'' என்றனர்.

''நான் சொல்வதைக் கேளுங்கள்,'' என்று தொடங்கிய மந்திரவாதி, ''அனைவரும் சந்திரசிலா செல்வோம். இந்த நிமிடத்திலிருந்து, காளிவர்மன் தான் உங்கள் படைத்தலைவன். புரிந்ததா?''

இதன்பிறகு அனைவரும் மந்திரவாதி சொற்படி சந்திரசிலா நோக்கி செல்லத் தொடங்கினர். இதற்குள் தப்பித்து ஓடிக்கொண்டிருந்த

துன்முகனையும் அவன் மெய்க் காப்பாளனையும் காட்டு மரங்களின் கிளைகளில் ஒளிந்து கொண்டிருந்த கொள்ளைக்காரர்கள் தலைவன் நாக மல்லன் பார்த்துவிட்டான். உடனே தன் ஆட்களை நோக்கி, ''அதோ அந்தக் குதிரை மீது வருபவனைக் கண்டால் பெரிய செல்வந்தன் எனத் தோன்றுகிறது. அவனுடன் வரு பவன் அவனது உதவியாளனாக இருப்பான். இருவரையும் மறித்து உயிருடன் பிடித்து வைத்துக் கொண்டால், இவர்கள் உறவினர் களிடமிருந்து பணயமாக பெருந் தொகையைப் பெறலாம்,'' என்றான்.

அப்போது நாகமல்லனின் ஆட்களில் ஒருவன், ''தலைவா, இவர்கள் ஆயுதம் தாங்கி வருகி றார்கள். இவர்களை எதிர்த்துச் சண்டையிட முடியாது. அதற்கு பதிலாக நாம் இங்கிருந்தே அவர்கள் மீது சுருக்குக் கயிற்றை வீசி அவர் களை பிடித்து விடுவோம்,'' என்றான்.

நாகமல்லனுக்கு அவன் சொன் னது சரியென்று தோன்றியது. ''நீ சொல்வது சரி. பார், அவர்கள் இந்தப்பக்கம் தான் வருகிறார்கள். எப்போது நமக்கு அருகே வருகிறார் களோ, அப்போது முதலில் வரும் அந்த செல்வந்தன் மீது சுருக்குக் கயிற்றை வீசி அவனைப் பிடி. அடுத்து வருபவனை நாங்கள் கவனித்துக் கொள்கிறோம்'' என்றான் நாகமல்லன்.

தங்களைத் துரத்தும் கரடியையும் யானையையும் பற்றியே தீவிர யோசனையில் இருந்த துன்முகனுக்கு இவ்விரண்டு பகைவர்களைத் தவிர இந்தக்காட்டில் வேறு யாரும் இருப்பதாகத் தோன்றவேயில்லை.

திட்டமிட்டபடியே, கொள்ளைக் காரர்களில் ஒருவன் துன்முகன் அருகில் வந்ததும், விரைவாக சுருக்குக் கயிற்றினை அவன் இடுப் பைச் சுற்றி வீசி சட்டென மேலே இழுத்து விட்டான். குதிரை மட்டும் தனியே ஓடத் துவங்கியது. நாக மல்லனும், மற்றொரு கொள்ளைக் காரனும் மரத்திலிருந்து குதித்து அந்த மெய்க்காப்பாளன் மேல் பாய்ந்தனர்.

(தொடரும்)





நவீன
வேதாளக்
கதை

# மன்னனும் சிற்பியும்

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழேயிறங்கி, அவன் அதைத் தூக்கிக் கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லுகையில், அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ‘‘விக்கிரமா! இந்த மயானத்தில் என்னை சுமந்து கொண்டு ஏன் இப்படி சிரமப்படுகிறாய்? உனக்கு ஏதோ மகத்தான லட்சியம் இருக்கிறது என்றும், அதை அடையவே நீ இப்படி எல்லாம் பாடுபடுகிறாய் என்றும் தோன்றுகிறது. ஆனால் எதற்காக இப்படி



முயற்சி செய்கிறாயோ, அந்த லட்சியம் நிறைவேறிய பிறகு அதை கை தவற விட்டு விடுவாயோ என்று நான் சந்தேகப்படுகிறேன். ஒரு பெரிய சிற்பியும் இதே தவறை செய்தான். அவனுடைய கதையை உனக்குச் சொல்கிறேன் கேள்,'' என்று கதை சொல்லத் தொடங்கியது.

கனககிரி சாம்ராஜ்ஜியத்தை ஆண்டு வந்த சக்கரவர்த்திக்குப் பணிந்து பல சிற்றரசர்கள் கப்பம் செலுத்தி வந்தனர். அப்படிப்பட்ட சிற்றரசர்களில் ஒருவரான வீரவரதன், சோணபுரம் என்ற நாட்டை ஆண்டு வந்தான். அவன் மகாவிஷ்ணுவின் தீவிர பக்தனாக இருந்தான்.

ஒருமுறை வீரவரதன் வேட்டையாட காட்டுக்குச் சென்றபோது, அங்கு காட்டிலுள்ள இயற்கை வனப்புக்களை வெகுவாக ரசித்துக் கொண்டே சென்றான். நண்பகலில் ஒரு மரத்தடியில் அமர்ந்து சிறிது ஓய்வெடுக்கத் தொடங்கி, சற்று நேரத்தில் கண்ணயர்ந்து உறங்கி விட்டான். அப்போது அவன் கனவில் மகாவிஷ்ணு தோன்றி ''வீரவரதா! முன்னொரு காலத்தில் இங்குள்ள மலையுச்சியில் எனக்கு ஒரு கோயில் இருந்து, அது இப்போது பாழடைந்து விட்டது. நீ எனக்குப் புதிதாக ஒரு கோயில் எழுப்பி பழையபடி கோயில் வழிபாடுகளைத் துவங்குவாய். இதனால் உனக்கும் உன் நாட்டுக்கும் நன்மை உண்டாகும்.'' என்று கூறி மறைந்தார்.

கனவில் இவ்வாறு மகாவிஷ்ணு அருளியதைக் கேட்டு வீரவரதன் மிகவும் மகிழ்ச்சியுற்றான். நாட்டுக்குத் திரும்பியவுடன், புகழ்பெற்ற சிற்பியான மயூரனை அழைத்து அவனிடம் கோயிலை உருவாக்கும் முழுப் பொறுப்பினை அளித்தான்.

மன்னன் சொற்படியே, மயூரன் கோயிலைத் தனது முழு முயற்சியுடன் மிக அழகாக உருவாக்கினான். ஆனால் இந்த கோயில் கட்டும் பணியில் எதிர்பார்த்ததை விட மிக அதிகமாக செலவு செய்ய நேரிட்டதால், அரசனின் கஜானா காலியாகி விட்டது. வீரவரதனால் சக்கரவர்த்திக்கு முறையாகக் கப்பம் செலுத்த இயலாமல் போய்விட்டது.

இதற்குள் கனககிரி சக்கரவர்த்தி இறந்து விட்டதால், அவரது மகன் தீரசேனன் சக்கரவர்த்தி ஆனான். தீரசேனன் உடனே சோணபுரத்தை நோக்கி படையெடுத்தான். சக்கர

வர்த்தியின் படை சோணபுரத்தை அடையும் வழியில், புதிதாகக் கட்டப் பட்ட கோயில் அருகே வந்தது. கொடியவனான தீரசேனனின் படைத் தலைவன், இந்தக் கோயிலின் பொருட்டன்றோ கப்பம் செலுத்த இயலவில்லை என்று நினைத்து, அந்தக் கோயிலை இடித்துத் தள்ள உத்தரவிட்டான்.

படைவீரர்கள் மலைமீதேறி ராஜ கோபுரத்தின் வழியே, கோயிலுக்குள் சென்றனர். கோயிலின் அழகிய சிற்ப வேலைப்பாடுகளைக் கண்டு பிரமித்துப் போய் நின்ற வீரர்கள் கருவறையின் முன்னே உள்ள வாயிற் காப்போர்களின் உருவச்சிலையை கூர்ந்து கவனித்ததும் திடுக்கிட்டனர். அந்த உருவச்சிலைகளின் கண்களி லிருந்து கண்ணீர் வழிந்து கொண்டு இருந்தது.

அதைக்கண்டு பயந்து போன சக்கரவர்த்தியின் வீரர்கள், கோயிலை சேதப்படுத்தத் துணியாமல் படைத் தலைவரிடம் தகவல் கூறினர். அதைக் கேட்ட படைத்தலைவனும் முன்னேறி போர் தொடுக்கும் எண்ணத்தை கைவிட்டு படை களுடன் கனககிரி திரும்பி விட்டான். வீரவரதனுக்கு இந்தச் செய்தியை கேட்டவுடன் கோபம் மூண்டது. அவன் உடனே சிற்பி மயூரனை அழைத்து, ''இப்படிபட்ட சிற்பங்களா செய்வது? கையில் வாளுடன் போர்க் கோலத்தில் சிற்பங்கள் வடித்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்? எதிரிகளின்



முன் கண்ணீர் விட்டு அழுது அடைக் கலம் கேட்டு இந்த சிற்பங்கள் எனக்கு அவமானத்தை ஏற்படுத்தி விட்டன,'' என்று சுடு சொற்களால் மயூரனின் நெஞ்சில் வேல் பாய்ச்சினான்.

மயூரன் விடையேதும் சொல் லாமல் மௌனமாகத் திரும்பிச் சென்றுவிட்டான். மலையடி வாரத்தில் கோயிலின் தொடர்ச்சியாக ஒரு பத்தாயிரக்கால் மண்டபம் நிறுவப்பட இருந்தது. மறுநாளி லிருந்து மயூரன் அந்த மண்டபத்தில் உள்ள பத்தாயிரம் தூண்களில் ஒவ்வொரு தூணிலும் ஒரு படை வீரன் வாளுடன் போர்க்கோலம் பூண்டிருப்பது போல் சிற்பம் வடிக்க ஆரம்பித்தான். மன்னனிடமிருந்து பண உதவி எதுவும் பெறாமல், தனது கூலியாகப் பெற்ற பணத்தையும், மற்றவர்களிடமிருந்து பெற்ற நன் கொடையையும் திரட்டி மண்டப



வேலையை நிறைவு செய்தான். கோயில் முழுவதும் கட்டி முடித்ததும், வீரவரதன் தன்னுடைய நாட்டை ஒரு சுதந்திர நாடாகப் பறைசாற்றினான். மீண்டும் சினமுற்ற சக்கரவர்த்தி, இம்முறை சோண புரத்தின் மீது ஒரு பெரும் படையை அனுப்பினான்.

செய்தியறிந்த மயூரன் மண்டபத்திற்குச் சென்று தான் செதுக்கிய போர் வீரர்களின் சிற்பங்களை நோக்கி, ''வீரர்களே, வெளியே வாருங்கள். தங்கள் வாளையுருவிக் கொண்டு எதிரிகளுடன் போரிடுங்கள், நமது நாட்டிற்கு வெற்றியைத் தாருங்கள்,'' என்று பணித்தான்.

அவ்வளவுதான், உடனே அந்த சிற்பங்கள் அனைத்தும் உயிர் பெற்று பாய்ந்தோடிச் சென்றன. சக்கரவர்த்தியின் படைவீரர்களால் தங்களை எதிர்த்து வந்த சிற்ப வீரர்களை எதிர்த்துப் போரிட முடியாமல், புறமுதுகிட்டு ஓடினர். வீரவரதன் வெற்றி வாகை சூடினான்.

மகிழ்ச்சிக் கடலில் மிதந்த வீரவரதன், சிற்பி மயூரனுக்குப் பரிசு கொடுக்க, அவனை அழைத்து வருமாறு ஆட்களை அனுப்பினான். ஆனால் மயூரனை நாட்டில் எந்த இடத்திலும் காணவில்லை.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி, ''மன்னா! மயூரனது செய்கைகள் மிகவும் விசித்திரமாக உள்ளன. இவன் அறிவற்றவனாக இருக்க வேண்டும், இல்லை மிகவும் அகந்தையுள்ளவனாக இருக்க வேண்டும். மன்னனுடைய கட்டளை பிடிக்கவில்லை என்றால், அவன் ஏன் தன் செலவிலும் ஊரார் நன்கொடையிலும் போர் வீரர்கள்

சிற்பங்களை வடிக்க வேண்டும்? பின் ஏன் குற்றவாளி போல மறைய வேண்டும்? இதற்கெல்லாம் பதில் தெரிந்தும், நீ கூறாவிட்டால், உன் தலை சுக்கு நூறாக வெடித்துவிடும்,'' என்று கூறி நிறுத்தியது.

அதற்கு விக்கிரமன், ''சிற்பி மயூரன் அறிவற்றவனோ, அகந்தை யுள்ளவனோ இல்லை. பதிலாக மனசாட்சியுள்ள ஒரு கை தேர்ந்த சிற்பி. மயூரன் வடித்த வாயிற்காப் போர் சிலைகள், அவனது அபூர்வ மான கலைத்திறமையைக் கண்டு பிரமித்துப் போய் ஆனந்தக் கண்ணீர் ததும்ப இருந்தன. வீரவரதன் நினைத்ததுபோல் எதிரிகளைக் கண்டு அஞ்சியல்ல. ஆனால் அவனது கலைத்திறமையை புரிந்து கொள்ளத் தெரியாமல், அரசன் அவனைக் கடிந்து கொண்டான். இது மயூர னுடைய கலை உள்ளத்தை மிகவும் புண்படுத்தியது. ஆனால் தன் மனக்குமுறலைப் பொருட்படுத்தாது அரசகட்டளைக்குப் பணிந்து, அரசன் சொற்படி போர் வீரர்கள் சிலைகளை வடித்தான். இதனால் நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் நன்மை ஏற்படும் எனக் கருதியே, தன் பணியைத் தொடர்ந்தான். இதுதான் முதல் கேள்விக்கான விடை. மன்னன் பிறப்பித்த முதல் கட்டளையில் ஓரளவு நியாயம் இருந்தது. ஆனால் தான் நினைத்தபடியெல்லாம் சிலைகள் மூலம் நடத்திக் காட்ட மயூரனால் முடியும் என்று அறிந்தால், அதே மன்னன் பிற்காலத்தில் சுயநலத் திற்காக தான் விரும்பும் பொருட் களை தான் பெற நினைக்கலாம். இப்படியெல்லாம் சிற்பம் வடிக்க அவன் விரும்பவில்லை. இதற் கெல்லாம் தீர்வு காண விரும்பியே, மயூரன் நாட்டை விட்டுச் சென்று விட்டான். இதுவே உனது அடுத்த கேள்விக்கு விடை,'' என்றான்.

விக்கிரமன் கூறிய சரியான விடையால் அவனது மௌனம் கலையவே, வேதாளம் அவன் சுமந்து வந்த உடலுடன் கிளம்பிப்போய் மீண்டும் முருங்கை மரத்தின் மேல் ஏறிக் கொண்டது.



இந்தியப் புராதனக் கதைகள் - 24

# நாய் வாலை நிமிர்த்த முடியுமா?

ஓர் அடர்ந்த காட்டில் ஒரு யோகி ஆசிரமம் அமைத்து, தன் சீடர்களுடன் வாழ்ந்து வந்தார். அவர் பெயர் அலோகானந்தர். அவருக்கு நூறு வயது நிரம்பியவுடன், ஒரு நாள் தன்னுடைய முக்கியமான சீடனான திரானந்தரை அழைத்து தன் இறுதி காலம் நெருங்கி விட்டது என்று தெரிவித்தார்.

பிறகு தன் சீடனை நோக்கி, ''தீரானந்தா, ஆசிரமத்திலுள்ள புனித மான பொருட்களை நன்கு பாதுகாத்து வா. ஆனால் அதோ அந்த மூலையில் உள்ள பெட்டியினுள் ஒரு கல் உள்ளது. அதை மட்டும் புனிதமான மந்திரத்தை ஓதிக் கொண்டே, நதியில் தூக்கி எறிந்து விடு,'' என்றார்.

''ஒரு மந்திரவாதி எனக்குக் கொடுத்த கல் அது. அதனுள் ஒரு தேவதை இருக்கிறது. அந்தக் கல்லை தரையில் எறிந்து விட்டால், அதனுள்ளிருந்து அந்த தேவதை வெளியே வந்து விடும். அதற்கு சில மந்திர, தந்திரங்கள் செய்யத் தெரியும். ஆனால் நமக்கு பயன்படும் படியான வேலை எதுவும் செய்யாது. அந்த தேவதைக்குத் தொடர்ந்து நீ வேலைகள் கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும். நீ கூறியவற்றை ஒரு நொடியில் செய்துவிட்டு, மீண்டும் மீண்டும் வேலை ஏதாவது கொடுக்கச் சொல்லி மிகவும் தொந்தரவு செய்யும். செய்யும் வேலைகளோ எல்லாம் ஏறுமாறாக இருக்கும். இதனால் இன்னல்களே அதிகம் உண்டாகும். அதை நதியில் எறிந்து விடுவதே நலம்,'' என்றார் யோகி. தொடர்ந்து, ''ஒரு முறை கல்லிலிருந்து, அது வெளியே வந்து விட்டால், மீண்டும் கல்லுக்குள் திரும்பிச் செல்லாது. ஐந்து



வருடங்கள் அதை விடுதலை செய்த வனைத் தொந்தரவு செய்யும்,'' என்றார்.

இவ்வாறு கூறிய சில நாட்களி லேயே யோகி உயிர் துறந்தார். அதற்கு மறுநாள், யோகியின் முக்கிய சீடரான திரானந்தருக்கு அந்த மந்திரக் கல்லும், தேவதையும் ஞாபகம் வந்தது. உடனே விரைந்து சென்று, திரானந்தர் அந்தப் பெட்டியைத் திறந்தார். என்ன ஆச்சரி யம்? அந்த மாயக்கல் பெட்டியினுள் இல்லவே இல்லை. மற்ற பெட்டி களையும் திறந்து பார்த்தும், எதிலும் அந்தக் கல் தென்படவில்லை.

இரண்டு நாட்கள் சென்றன. ஒருநாள் நள்ளிரவு, யாரோ கதவைத் தட்டும் ஒலி கேட்டு, திரானந்தர் கதவைத் திறந்தார். யோகியின் சீடர்களில் ஒருவனான சந்திரன் வாயிலில் நின்று கொண்டிருந் தான்.

திரானந்தரும், யோகியும் பேசிக் கொண்டிருந்ததை தான் ஒளிந்திருந்து கேட்டதாகவும், அந்த மாயக்கல்லைப் பற்றித் தான் தெரிந்த கொண்டதாகவும், சந்திரன் சொன்னான்.

''அந்த மாயக்கல்லைப் பற்றி கேட்டவுடன், என்னால் என் ஆவலைக் கட்டுப் படுத்த முடியவில்லை. உடனே யாருக்கும் தெரியாமல் அந்தக் கல்லை நான் திருடி விட்டேன். ஏனெனில் அதை நானே எடுத்துப் பயன்படுத்திக் கொள்ள எண்ணி, அந்தக் கல்லை தரையில் வீசி அடித்தேன். உடனே ஒரு தேவதை வந்து என்னிடம் வேலை கேட்டது. நான் அதை அழைத்துக் கொண்டு கடைத் தெருவுக்குச் சென்றேன். அந்த தேவதை என் கண்களுக்கு மட்டுமே தெரிந்தது. மற்றவர்களுக்குத் தெரியவில்லை.

கடைத்தெருவில் கூடியிருந்த மக்களை மாய வித்தைக் காட்டப்



போவதாகச் சொல்லி அழைத்தேன். பிறகு அந்த தேவதையிடம் அருகி லிருந்த ஒரு புதரை எரித்து விடும்படி கட்டளையிட்டேன். உடனே அதன் படியே அது புதரை எரித்து விட்டது. வீட்டுக்கு வந்தவுடன், அந்த தேவதை வேறு ஏதாவது வேலை கொடுக்கச் சொல்லிக் கேட்க, நானும் தோட்டத் திலுள்ள செடிகளுக்குத் தண்ணீர் விடச் சொன்னேன். உடனே செடிகளை எல்லாம் வேரோடுப் பிடுங்கி, தண்ணீரை அவற்றின் மீது பாய்ச்சியது.

இந்தத் தாறுமாறான செயலைக் கண்டு அதிர்ச்சியுற்றேன். மீண்டும் ஏதாவது வேலை தரச் சொல்லி நச்சரித்தது. ஒரு தங்க மோதிரம் கொண்டு வா என்று அதற்கு உத்தரவு இட்டவுடன், மறு வினாடியே என் கையில் ஒரு மோதிரம் மாயமாக வந்து விட்டது. அதேசமயம், என் தங்கையின் கை விரலிலிருந்து மோதிரம் காணாமல் போய்விட்டது. அது என் தங்கையின் மோதிரத்தைத் திருடி என்னிடம் கொடுத்து விட்டது என்று அப்போது தான் புரிந்தது.'' இதைக் கேட்ட திரானந்தர், ''உன் வயலுக்குச் சென்று

நிலத்தை உழச் சொல்லலாமே!'' என்று சொல்ல, ''வேண்டாம். அது மறுபடியும் ஏதாவது தாறுமாறாக செய்து விடும். அந்தத் தேவதையால் சில மந்திர தந்திரங்களைச் செய்ய முடியுமே தவிர நமக்குப் பயன்படும் விதத்தில் சீராக எந்த வேலையும் செய்ய முடியாது. ஐந்து ஆண்டுகள் நான் எப்படி இந்த மாதிரி சில்லறை வேலைகளை செய்யச் சொல்வது? இதற்கு என்ன வேலை தரலாம் என்று யோசித்து யோசித்து என் மூளை குழம்புகிறது. இதை எப்படி இப்போது விரட்டுவது?'' என்று மிகுந்த கவலையுடன் சந்திரன் கேட்டான்.

திரானந்தர் சற்று யோசித்த பிறகு, சந்திரனுக்கு ஒரு யோசனை கூறினார். இதற்குள் அந்தத் தேவதை சந்திரனைத் தேடி வந்து விட்டது.

''உனக்கு ஒரு வேலை தயாராக உள்ளது'' என்று மகிழ்ச்சியுடன் சொன்ன சந்திரன், அதை வீட்டுக்குப் பின்புறம் அழைத்துச் சென்று அங்கு படுத்திருந்த நாயைக் காட்டினான்.

''தேவதையே, அந்த நாயின் வாலைப் பார். அது சுருண்டு இருக்கிறது. நாயைத் துன்புறுத்தாமல், அந்த சுருண்ட வாலை எப்படியாவது நிமிர்த்திவிடு,'' என்றாள் சந்திரன்.

''ஒரு நொடியில் செய்கிறேன்,'' என்று உற்சாகமாகச் சொல்லிக் கொண்டே அந்தத் தேவதை நாயின் அருகில் அமர்ந்து அந்த வாலை தன் கைகளால் பிடித்து நேராக்கியது. ஆனால், கைகளை விட்டவுடன், வால் மீண்டும் சுருண்டு கொண்டது. மீண்டும் மீண்டும் தேவதை அந்த நாய் வாலை நிமிர்த்த முயற்சி செய்தது. ஆனால் முடியவில்லை.

சந்திரன் நிம்மதியாக தன் வீடு நோக்கிச் சென்றான். ஐந்தாண்டுகள் இதே முயற்சியில் அந்த தேவதை ஈடுபட்டுக் கொண்டிருக்கும் என்றும், தன்னைத் தொந்தரவு செய்யாது என்றும் தெரிந்தவுடன் மிகவும் ஆறுதல் அடைந்தான். மறுமுறை திரானந்தரை சந்தித்த போது, ''சில மனிதர்களின் இயல்புகள் நாயின் வாலினைப் போன்றது என்று யோகி சொல்வதன் அர்த்தம் இப்போது புரிந்ததா? நாயின் வாலை எவ்வாறு நிமிர்த்த முடியாதோ, சில மனிதர்களைத் திருத்த முடியாது,'' என்றார் திரானந்தர்.

இருவரும் நடந்ததை நினைத்து சிரித்தனர். தான் இவ்வாறு தவறு செய்ததற்கு, மீண்டும் திரானந்தரிடம் சந்திரன் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான்.



# விதியின் விளையாட்டு



ஜிம் பக்லி, பில் பக்லி என்ற இரு சகோதரர்களும் அருகிலுள்ள நகரத்திலிருந்து தங்கள் ஊர் திரும்பிக் கொண்டிருந்தனர். திடீரென, புதர்களில் மறைந்திருந்த, இரு நபர்கள் வெளிவந்து இரு சகோதரர்களையும் துப்பாக்கியால் சுட்டனர். பில்மீது குண்டு பாய்ந்ததால், அவன் சுருண்டு விழுந்து இறந்தான்.

ஜிம் மட்டும் தப்பிச் சென்று விட்டான். ஏற்கனவே தங்கள் உயிருக்கு ஆபத்து உள்ளது என்று தெரிந்திருந்தும், அவர்கள் அதற்கேற்ற பாதுகாப்பு நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளவில்லை.

இந்தச் சம்பவம் வடஅமெரிக்காவில் மிசிசிபி மாநிலத்தில் கொலம்பியா நகரத்துக்கருகே, மேரியன் கிராமத்தில் நிகழ்ந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் மிசிசிபி மாநிலத்தில் ஒரு பயங்கரவாதிகளின் குழு அங்குள்ள விவசாயிகளைத் துன்புறுத்திக் கொள்ளையடித்து வந்தது. பக்லி சகோதரர்கள் காவல் துறைக்கு இதை அறிவித்தனர். அதனால் பயங்கரவாதிகள் அவர்களை பழிவாங்கத் தீர்மானித்தார்கள். அதன் விளைவுபில் உயிரிழக்க நேரிட்டது.

காவல்துறையினர் குற்றவாளியின் விவரங்களைக் கேட்டபோது வில் பர்விஸ் என்னும் இருபத்தோரு வயது வாலிபன்தான் இந்தக் கொலையை செய்தவன் என்று ஜிம் அறிவித்தான். பர்விஸ் என்ற பக்கத்து ஊரிலுள்ள, ஒரு நாணயமான விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்த வில் பர்விஸ் கைது செய்யப்பட்டான்.

இந்தக் கொலைக் குற்றம் நீதி மன்றத்திற்கு விசாரணைக்குச்



சென்றது. விசாரணையில் ஐந்து முக்கியமான சாட்சிகள் அனைவரும் வில் பர்விஸ் இந்தக் குற்றத்தை செய்யவில்லை என்றும், கொலை நடந்த தினம் அவன் தனது வீட்டிலே தான் இருந்ததாகவும் கூறினர். ஆனால் அந்த வழக்கில் ஆஜரான நீதிபதி அந்த சாட்சியங்களை நம்பாமல் தூக்கு தண்டனை விதித்துத் தீர்ப்புக் கூறினார். இதை எதிர்த்து உயர் நீதிமன்றத்தில் தொடுக்கப்பட்ட வழக்குகளும் தோல்வியுற்றன. வில் பர்விஸுக்கு தூக்கு தண்டனை உறுதிப் படுத்தப் பட்டது. அந்த கிராமத்து தேவாலயப் பாதிரியார் வில் பர்விஸைப் பற்றி நன்கு அறிந்தவர். அவரும் அவனை குற்றமற்றவன் என்றே நம்பினார். தூக்கிலிடப் படுவதற்கு முதல் நாள் சிறையில் சென்று அவனைப் பார்த்த பாதிரி யாரிடம், ''நான் நடக்கப் போவதைப் பற்றி கவலைப் படவில்லை. நான் குற்றமற்றவன்,'' என்றே வில் கூறினான்.

*1894*ம் ஆண்டு பிப்ரவரி 7ந் தேதி அவனைத் தூக்கிலிட நாள் குறிக்கப் பட்டிருந்தது. ஆயிரக்கணக்கான மக்கள் அன்றைய தினத்தில் தூக்கு மேடைக்கருகே கூடினர். அவனது இறுதி ஆசை என்ன என்று கேட்கப் பட்ட போது, ''நான் கொலை செய்யவில்லை. என்னைக் காப்பாற்ற வேண்டும் என்று நினைத் தால், அது ஒரு சிலரால் முடியும். அவர்கள் விரும்பினால் என்னைக் காப்பாற்ற முடியும்,'' என்றான் வில்.

ஆனால் அவனைக் காப்பாற்ற யாரும் முன் வரவில்லை. அவனுக்கு கருப்பு முகமூடியிடப்பட்டு, தூக்குக் கயிறும் கழுத்தில் மாட்டப்பட்டது. தலைமையதிகாரி சைகை காண்பிக்க, தூக்குக் கயிறும் இழுக்கப் பட்டது.

அப்போதுதான் அந்த மாபெரும் அதிசயம் நிகழ்ந்தது. வில்லின் கழுத்தில் மாட்டியிருந்த சுருக்குக் கயிறு மட்டும் அந்தரத்தில் ஊச லாடிக் கொண்டிருந்தது. வில் மயக்கமாக ஆனால் உயிருடன் கீழே விழுந்திருந்தான். ஆம், தூக்குக் கயிறை மேல் நோக்கி இழுக்கும் போது, அந்த சுருக்கு அவன்

கழுத்தினின்று அகன்று விட்டது. சிறையதிகாரிகள் கீழே வீழ்ந்து கிடந்த வில்லை தூக்கி மறுபடியும் தூக்கி லிட முயற்சிக்கையில், தேவாலயப் பாதிரியார் அந்த முயற்சியை தடுத்தார். கடவுளின் கருணையும், விதியும் அவனைக் காப்பாற்றி விட்டதாகவும், அவனை மீண்டும் தூக்கிலிடக் கூடாதென்றும் வாதாடி னார். கூடியிருந்த மக்கள் அனைவரும் பாதிரியாருக்கு ஆதரவாக தங்கள் கருத்தினைத் தெரிவித்து, மீண்டும் அவனைத் தூக்கிலிடக் கூடாது என்று ஆரவாரித்தனர். குழப்பமடைந்த சிறையதிகாரிகள் தூக்கில் போடும் முயற்சியை கைவிட்டு, மீண்டும் வில்லை சிறையில் அடைத்தனர்.

ஆனால் அந்த மாநில முதல் வருக்கு சிறையதிகாரிகள் இவ்வாறு செய்தது பிடிக்கவில்லை. ஒருமுறை விதிவசத்தால் தூக்குக் கயிறு நழுவி விட்டது என்பதற்காக, தண்டனை யை எப்படி நிறுத்த முடியும்? மீண்டும் அவனைத் தூக்கிலிட்டு தண்டனையை நிறைவேற்ற வேண்டும் என நினைத்தார். பல வழக்கறிஞர்கள் இந்த முறை வில்லுக்கு ஆதரவாக முதல்வரிடம் விண்ணப்பித்தும் பயனில்லாமல் உயர் நீதிமன்றத்தில் தண்டனை மீண்டும் ஊர்ஜிதப்படுத்தப்பட்டது.

1895ம் ஆண்டு டிசம்பர் 12ந்தேதி இரண்டாம் முறை தூக்கிலிட நாள் குறிக்கப்பட்டது. ஆனால் வில் இதைக் கேட்டும் அமைதியாகவே இருந்தான். தன்னை ஒரு முறை மரணத்திலிருந்து காப்பாற்றிய கடவுள், மறுபடியும் தன்னுதவிக்கு வருவார் என்று நம்பினான்.

வில்லுக்கு மரணதண்டனை விதித்த நீதிமன்றம் அவன்மீது அனுதாபப்பட்டு, அவனுடைய ஊருக்கு அருகில் உள்ள சிறைக்கு அவனை மாற்றியது. இறக்கும் முன்பாக தனது உறவினர்களை அடிக்கடி கண்டு ஆறுதலடைய உதவியாக இருக்கும் என்ற எண்ணத்தில் இந்த வசதி தரப்பட்டது.

ஆனால் மரணதண்டனைக்கு ஓரிரு நாட்கள் முன்பாக திடீரென ஒரு சம்பவம் நிகழ்ந்தது. ஒரு பெரிய கும்பல் சிறைச்சாலைக்குள் அத்துமீறி நுழைந்து சிறைக் கதவுகளைத் தகர்த்து, வில்லை விடுவித்துக் கொண்டு போய் விட்டது. மாநில முதல்வர் மிகவும் கோபமடைந்து, சிறையதிகாரிகளைக் கடிந்து



கொண்டு வில்லைப் பிடித்துத் தருபவர்களுக்கு பெரிய பரிசுகள் வழங்கப் போவதாக அறிக்கை விடுத்தார். ஆனால் மலைகளுக்கு அப்பால் அடர்ந்த காட்டுக்குள் வில் தன் குடும்பத்துடன் ரகசியமாக வசிக்கிறான் என்ற உண்மை பலருக்கு தெரிந்திருந்தும், யாரும் காட்டிக் கொடுக்கவில்லை.

வேறு புதிய மாநில முதல்வர் பதவியேற்றார். வில்லின் மரண தண்டனையை மாற்றி சாதாரண சிறை தண்டனையாகச் செய்வதாகக் கூறி, சரண் அடையும்படி வில்லுக்கு பத்திரிகை மூலம் அறிக்கை விட்டார். இதைக் கேட்ட வில் சரண் அடைந் தான். அதனால் அவன் மீண்டும் சிறையில் அடைக்கப் பட்டான்.

இதற்குள் வில்லுக்கு முதன் முதலில் மரணதண்டனை விதித்த நீதிபதி உட்பட பல்லாயிரக்கணக் கான மக்கள், வில்லை விடுதலை செய்யக் கூறி முதல்வருக்கு விண்ணப் பித்தனர். இதன் பேரில், வில் பர்விஸ் இறுதியாக விடுதலை செய்யப் பட்டான். சிறையிலிருந்து வெளி வந்த வில் மணம் புரிந்து பல குழந்தைகளுக்குத் தந்தையும் ஆனான்.

ஆனால் பில் பக்லியை யார் கொன்றது என்பது மட்டும் மர்ம மாகவே இருந்தது.

வருடங்கள் பல உருண்டோடின. ஜோ பேர்ட் என்ற வயதான விவசாயி ஒருநாள் தனது மரணப்படுக்கையில் இருக்கையில் தான் தான் பில் பக்லியை கொலை செய்தவன் என்ற உண்மையைப் பலர்முன் வெளி யிட்டான். பயங்கரவாதிகளின் குழுவில் ஒருவனான அவன் செய்த கொலைக் குற்றம் எப்படி வில்லின் மீது சுமத்தப்பட்டது என்பது யாருக்கும் புரியவில்லை. அரசாங்கம் பல ஆண்டுகளாக வில்லை சிறையி லிட்டுத் துன்புறுத்தியதற்கு வில்லி டம் மன்னிப்பு கேட்டுக் கொண்டு, உதவித் தொகையும் அளித்தது.

அதிருக்கட்டும். வில் பர்விஸ் மரணத்தின் தலைவாயில் வரை சென்று விட்டு எப்படி இரு முறையும் தப்பித்தான்? அவனது நண்பர்கள் நம்பியபடி, அவனது கடவுள் மீதும் விதி மீதும் இருந்த ஆழ்ந்த நம்பிக்கை தான் அவனைக் காப்பாற்றியதா?



# செய்தி சுடர்




## பொதி சுமக்கும் வேலை இனி இல்லை

தொலைக்காட்சியில் ஒளிபரப்பப்படும் துணுக்கு நிகழ்ச்சிகளில் மூன்று பள்ளிக் குழந்தைகள் எடுத்துச் செல்லும் புத்தகப் பைகளில் முறையே எல்.கே.ஜி, யு.கே.ஜி, 5கேஜி என்று எழுதப்பட்டிருப்பது போல காணப் படுகின்றன. கடைசியில் உள்ள 5 கேஜி என்பது குழந்தைகள் சுமக்கும் புத்தகங்களின் எடையை வேடிக்கையாகக் குறிக்கிறது. சமீபத்தில் நமது பாராளுமன்றத்தில் கூட இந்த விஷயம் விவாதிக்கப் பட்டுள்ளது.

நாடு முழுவதும் 'சென்ட்ரல் ஸ்கூல்' என்னும் மத்திய அரசாங்கம் நடத்தி வரும் பள்ளிகளின் தலைமை அலுவலகம் குழந்தைகள் இவ்வாறு புத்தகங்களை சுமக்கும் சிரமத்தை வெகுவாகக் குறைக்க முதல், இரண்டாம் வகுப்புவரை இனிக் குழந்தைகள் எந்த புத்தகங்களும் பள்ளிக்கு எடுத்துச் செல்ல வேண்டாம் என்று பரிந்துரைத்துள்ளது.

அவை இனிப் பள்ளியிலேயே இருக்கும். அவற்றை வீட்டுக்கு எடுத்துச் சென்று மீண்டும் எடுத்து வரத் தேவையில்லை.

குழந்தைகளுக்கு 'ஹோம் ஒர்க்' எனப்படும் வீட்டு வேலை இனி கொடுக்கப்படப் போவதில்லை. வீட்டில் தங்களது ஓய்வு நேரத்தை தன் விருப்பப்படி குழந்தைகள் கழிக்கலாம். பல மாதங்கள் செய்த ஆராய்ச்சியின் பிறகு இந்த முடிவு எடுக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு இன்னும் சில மேல் வகுப்புகளுக்கும் இந்தச் சலுகையை காண்பிக்கவும் யோசனை நடந்து கொண்டு இருக்கிறது.

காஷ்மீர் நாட்டுப்புறக் கதை

# பொருத்தமான மணமகன்



**ப**ல ஆண்டுகளுக்கு முன், காஷ்மீரத்தை ஆண்டு வந்த ஒரு நல்ல தயாள குணமுள்ள மன்னனுக்கு மூன்று புதல்வர்கள் இருந்தனர். அவர்கள் வளர்ந்து பெரியவர்களாகி அழகிலும், பராக்கிரமத்திலும் சமமாக இருந்தனர். மூவரும் தலை நகரத்திலிருந்து தொலைவில் தங்கி, பல ஆண்டுகளாக அரசாளுங் கலைகளிலும், போர்முறைகளிலும் தீவிரப் பயிற்சி பெற்று வந்தனர். அம்மூவர் மேலும் சமமான அன்பு பூண்டிருந்த மன்னன், பயிற்சிக்காலம் முடிந்ததும் அவர்களை தலை நகரத்திற்கு திரும்புமாறு அழைத்தான். அவர்களுக்குத் திருமணம் செய்விக்கும் நேரம் வந்துவிட்டது என்றும் உணர்ந்தான்.

தன் புதல்வர்களுக்குப் பொருத்தமான பெண்களைத் தேடி நாட்டின் எல்லா இடங்களுக்கும், மற்றும் பிற நாடுகளுக்கும் தூதுவர்களை அனுப்பி விசாரித்து வந்தான். இப்படி அனுப்பிய தூதுவர்களில் ஒருவன் திரும்பி வந்து ஒரு நடன மாதின் அழகான பெண்ணை தான் பார்த்து விட்டு வந்ததாகவும், அந்த நடன மாது தூதுவனிடம் விவரங்களைக் கேட்டுவிட்டு, மூத்த இளவரசனையே தன் மகளுக்குத் திருமணம் புரிய விரும்புவதாகவும் சொன்னான். காரணம், மூத்த இளவரசனுக்குத்தான் பிற்காலத்தில் பட்டம் சூட்டுவார்கள் ஆதலால் தன் மகள் பட்டத்து ராணியாகி விடுவாள் என்பதுதான்.

மன்னனுடைய இரண்டாவது புதல்வனுக்கு இசையிலும், ஓவியம் தீட்டுவதிலும் மிகவும் ஆர்வம் இருந்ததைக் கண்டு, மன்னன்

மேற்கூறிய பெண் அவனுக்குப் பொருத்தமாக இருப்பாள் என நினைத்தான். ஆனால் தனது புதல்வர் களின் விருப்பத்தை மீறி எதுவும் செய்ய விரும்பாததால் ஒரு சோதனை நிகழ்த்திப் பார்க்க தீர்மானித்தான்.

தன்னுடைய புதல்வர்களை அழைத்து அவர்களிடம் மேற்கூறிய பெண்ணைப்பற்றிக் கூறினான். பிறகு அவர்களை ஓர் ஆறுமாத காலத்திற்கு இதுவரை செல்லாத வெளி நாடுகளுக்கு பயணம் செய்து இது வரை யாரும் பார்த்திராத பரிசுப் பொருட்களை அந்தப் பெண்ணிற் காக வாங்கி வரச் சொன்னான். இவற்றில் யார் கொண்டு வரும் பரிசு மிகவும் அற்புதமாக உள்ளதோ, அவனே அந்தப் பெண்ணை மணக்க லாம் என்றும் கூறினான்.

இதைக் கேட்ட மூவரும் மகிழ்ச்சி யுடன் மறுநாளே மூன்று வெவ்வேறு திசைகளில் குதிரை மீதேறி பயண மாயினர். ஆறுமாதங்கழித்து அரண் மனைக்குத் திரும்புமுன் தாம் மூவரும் ஒரு பொது இடத்தில் சந்திக்க வேண்டும் என்றும் தீர்மானித்துக் கொண்டனர்.

மூத்தவன் கிழக்கு திசையிலும், இரண்டாமவன் மேற்கிலும், மூன்றா மவன் தெற்கிலும் இவ்வாறு வெவ் வேறு திசைகளை நோக்கிப் புறப் பட்டனர். மூத்தவன் பல இடங் களுக்குச் சென்றும், பல புதிய பொருட்களைப் பார்த்தும், அதிசய மாக ஒன்றும் தென்படவில்லை. இறுதியில் வெறுங்கையுடன் திரும்ப வேண்டியதுதானா என்று வருத்தப் பட ஆரம்பித்தான்.

இறுதியில் ஓரிடத்தில் அவன் சில அதிசயக் காட்சிகளைக் கண்டான். அந்த இடத்தில் ஒரே மரத்தில் பலவிதப் பழங்களையும், பறவைகள் மனிதர்கள் போல் பேசுவதையும் கண்டான். பழங்களைப் பறித்து எடுத்துச் செல்வது வீணான வேலை என்றும், பறவைகளைப் பிடிப்பது இயலாத காரியம் என்றும் உணர்ந்து வேறு ஏதாவது அதிசயப் பொருள் கிடைக்குமா எனத் தேடத் தொடங்கினான்.

அப்போது ஒரு வியாபாரி பல அழகான கம்பள விரிப்புகளை விற்கக் கண்டான். அவற்றின் விலை





ஒன்றுக்கு ஐயாயிரம் ரூபாய் என்று அறிந்த இளவரசன் வியப்புடன் அதிக விலைக்குக் காரணம் கேட்டான். அதற்கு அந்த வியாபாரி அந்த கம்பளத்தில் உட்கார்ந்து எங்கு செல்ல விரும்பினாலும் அங்கே பறந்து சென்று விடலாம் எனக் கூறவே, ஒரு அழகான கம்பளத்தை விலைக்கு வாங்கிக் கொண்டு, நாடு திரும்பிச் செல்லத் தொடங்கினான்.

இரண்டாவது இளவரசனும் பல இடங்களைத் தேடி அவனுக்கும் எங்கும் அபூர்வமான பொருள் கிடைக்கவில்லை. இறுதியில் ஒரு ஊரில் யாருமே வசிக்காத வீடுகளும், விற்பனைக்குப் பொருட்கள் இருந்தும் விற்பனையாளர்களே இல்லாத கடைகளையும் கண்டு வியப்புற்றான்.

யாருமேயில்லாத ஒரு தோட்டத்தில் ஒரு மாதுளை மரத்தில் பழங்கள் இருந்ததைக் கண்டு, அதைப் பறிக்க முயற்சிக்கையில், திடீரென ஒரு தோட்டக்காரன் வந்து, ''அதைப் பறிக்காதே'' என்றான். ''ஏன்?'' என்று இளவரசன் கேட்க, ''அவை விலையுயர்ந்தவை. ஒன்றின் விலை ஐந்தாயிரம் ரூபாய்'' என்றான் அந்தத் தோட்டக்காரன்.

மேலும் விசாரித்த போது, அந்தப் பழம் எந்த வியாதியையும் குணப்படுத்த வல்லது என்றும், அதைப் பிளந்து அதிலுள்ள முத்துக்களை எடுத்து விட்டாலும் மீண்டும் பழம் பழைய நிலைக்கே முழுதாக ஆகிவிடும் என்றும் சொன்னான். உடனே அந்தப் பழங்களில் ஒன்றை வாங்கிய இளவரசன், தன் நாட்டை நோக்கிப் பயணமானான்.

மூன்றாமவன் வெகுதூரம் தென் திசையில் பயணம் செய்தபின், ஓர் அதிசயமான ஊரில் கண்ணாடியால் செய்யப்பட்ட வீடுகளைப் பார்த்தான். அந்த ஊர் மக்களும் கண்ணாடியாலான உடையை அணிந்திருந்தார்கள்.

ஒரு கடையில் அழகான முகம் பார்க்கும் கண்ணாடிகளைக் கண்டான். ஒன்றின் விலை ஐயாயிரம் ரூபாய் என அறிந்து வாங்க வேண்டாம் என்று நினைத்தவனைப் பார்த்து கடைக்காரன் அது அபூர்வ

சக்தியுடையது என்றும், தான் பார்க்க விரும்பும் இடத்தையோ, நபரையோ மனதில் நினைத்துக் கொண்டு அந்தக் கண்ணாடியில் பார்த்தால் அவர்களை அல்லது அந்த இடத்தை கண்ணாடி யில் பார்க்கலாம் என்றான். தன் சகோதரர்களை நினைத்துக் கொண்டே ஒரு கண்ணாடியில் பார்க்க, அவர் களது உருவம் தெரியக் கண்டான். பரிசுப் பொருட்களுடன் அவர்கள் நாடு திரும்புவதைக் கண்டவுடன், உடனே ஒரு கண்ணாடியை வாங்கிக் கொண்டு பயணமானான்.

மூவரும் ஒப்பந்தப்படியே நாடு திரும்புமுன் ஒரு பொது இடத்தில் சந்தித்தனர். மூவரும் தங்களது அனுபவங்களைப் பகிர்ந்து கொண் டிருந்தபோது, திடீரென அந்தப் பெண்ணின் ஞாபகம் அவர்களுக்கு வந்தது. மூன்றாவது இளவரசன் தன் ஆர்வத்தைக் கட்டுப் படுத்த முடியாமல், தனது கண்ணாடியை வெளியில் எடுத்து அவளைப் பற்றி நினைத்தான். ஆனால் கண்ணாடியில் தெரிந்த காட்சியைக் கண்டு, ''அடக் கடவுளே'' என்று கூறினான்.

அவனது சகோதரர்களும் ஆவலு டன் எட்டிப் பார்க்க, அந்தப் பெண் உடல் நலக் குறைவால் படுத்த படுக்கையாக இருப்பதைக் கண்டார் கள். அந்தப் பெண்ணின் தாய் ஏதோ மருந்து கொடுத்துக் கொண்டிருக்கக் கண்டார்கள். அப்போது இரண்டா மவனுக்குத் தன்னிடமுள்ள மாதுளம் பழத்தின் ஞாபகம் வந்தது. ''ஆகா, இப்போதே நான் சென்று அவளுக்கு இந்த மாதுளம் பழத்தைக் கொடுத்தால் குணமாகி விடுவாள் ஆனால் அவ்வளவு தூரம் உடனே எப்படி போக முடியும்'' என்று கூறினான்.

உடனே மூத்தவன் அந்தப் பெண்ணிற்குப் பரிசாக வாங்கி வந்த தன்னிடமுள்ள கம்பளத்தைக் காட்டி, அதில் மற்றவர்களையும் உட்காரச் சொன்னான். மூவரும் அந்தக் கம்பளத்தில் பறந்து போய் அந்த நடனமாதின் இருப்பிடத்தை வந்து அடைந்தனர். மூவரும் நடனமாதின் பெண்ணை குணப்படுத்த வந்திருப் பதாகக் கூறியதும் நடனமாது அம்மூவரையும் மகிழ்ச்சியுடன் வரவேற்றாள்.

படுத்த படுக்கையாயிருந்த அந்தப் பெண்ணிற்கு இரண்டாமவன்



மாதுளம் பழத்தை வெட்டி அதிலுள்ள விதைகளை எடுத்து அந்தப் பெண்ணிற்கு சாப்பிட கொடுத்தான். அதை சாப்பிட்ட சிறிது நேரத்திலேயே அந்தப் பெண் மலர்ந்த முகத்துடன் எழுந்து உட்கார்ந்து கொண்டு, ''அம்மா, நான் நன்றாக ஆகிவிட்டேன். என் வியாதி மறைந்து விட்டது,'' என்று மகிழ்ச்சியுடன் கூறினாள்.

அவர்கள் இளவரசர்கள் என்றும், அதில் ஒருவன் தான் தன்னை மணந்து கொள்ளப் போகிறான் என்று அறியாத அந்தப் பெண்ணும், அவள் தாயும் தங்களது மனமார்ந்த நன்றியை அவர்களுக்குத் தெரிவித்தனர். இளவரசர்களும் அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு, தாங்கள் குதிரைகளை நிறுத்தி வைத்துள்ள இடத்திற்கும் பின்னர் அங்கிருந்து தங்கள் அரண்மனையை நோக்கிக் கம்பளத்தில் ஏறிப் பறந்தனர்.



அரண்மனையை அடைந்து தங்கள் தந்தையைக் கண்டு தங்கள் வீட்டிற்கு மருமகளாக வரும் பெண்ணை எந்த நிலமையில் அவர்கள் கண்டனர் என்று நடந்தவற்றைக் கூறினர். ஆனால் இதையெல்லாம் கேட்ட பிறகும் கூட தமது புதல்வர்களுக்குள் யார் அந்தப் பெண்ணை மணக்கத் தகுதியானவன் என்ற முடிவுக்கு மன்னனால் வர முடியவில்லை. அந்தப் பெண்ணையும், அவள் தாயையும் தங்கள் அரண்மனைக்கு அழைத்து அந்தப் பொறுப்பை அவர்களிடமே விட்டு விடலாம் என நினைத்தான். அதன்படியே அவர்களை அழைக்க, இருவரும் அரண்மனைக்கு வந்தனர். இருவரையும் ராஜமரியாதையுடன் வரவேற்று சபையில் அனைவருக்கும் முன்பு தன்னுடைய புதல்வர்களின் பயண அனுபவங்களையும் அவர்கள் எவ்வாறு அந்தப் பெண்ணை குணப்படுத்தினர் என்ற விவரங்களையும் மன்னன் விளக்கிக் கூறினான்.

''என்னுடைய புதல்வர்கள் தாங்கள் யார் என்பதை தங்களிடம் தெரிவிக்கவில்லை. ஆனால் அவர்கள் உங்களுக்குச் செய்த உதவிக்கு உங்களிடமிருந்து அவர்கள் விடை பெறும்பொழுது நன்றி தெரிவித்து விட்டீர்கள். நீங்கள் நடந்தவற்றை கோர்வையாக

எண்ணிப்பார்த்தீர்கள் என்றால் உண்மையிலேயே என் இரண்டாவது புதல்வன் கொண்டு வந்த மாதுளம் பழம் தான் தங்கள் பெண்ணைக் காப்பாற்றியது. ஆனால் தங்கள் பெண் உடல் நலக்குறைவாக இருக்கிறாள் என்று கண்டு பிடித்ததே என்னுடைய மூன்றாவது மகன்தான். என் மூத்த மகனது கம்பளம் மட்டும் இல்லா விட்டால் சரியான நேரத்தில் அந்த மாதுளம் பழம் உங்கள் பெண்ணிற்கு கிடைத்திருக்காது. ஆக, உங்கள் பெண் குணமானதில் மூவருக்குமே சமபங்கு உண்டு. அந்த மூவரையும் உங்கள் எதிரே வரவழைக்கிறேன். மணாளனாக எந்தப் புதல்வனைத் தேர்ந்தெடுப்பது என்று எனக்கு நீங்கள் உதவி செய்யுங்கள்'' என்றான் மன்னன்.

மன்னன் அவர்கள் இருவரிடம் அந்த பொறுப்பை விட்டு விட்டு, தன் மூன்று மகன்களையும் இருவர் முன் நிறுத்தினான். மூவரையும் அரச உடையில் கண்டு களித்த இரு விருந்தாளிகளும் மூவரையும் உற்று கவனித்தனர்.

சற்று நேரத்திற்குப் பின் பெண்ணின் அம்மா, 'அரசே, உங்கள் இரண்டாவது மகன்தான் என் பெண் உயிர் பிழைக்க முக்கியக் காரணமா யிருந்தவன். அவன் மட்டும் அந்தப் பழம் கொண்டு வரவில்லையெனில், மூவரும் சரியான நேரத்தில் வந்தும் பயன் இருந்திருக்காது. ஆகவே அவனையே மணமகனாகத் தேர்ந் தெடுக்க விரும்புகிறேன்,'' என்றாள்.

இதுவரை மௌனமாக இருந்த அந்தப்பெண்ணும், ''அம்மா. நீ சொல்வது சரி,'' என்று சொல்லி நாணத்தில் தலை குனிந்தாள்.

ஏற்கனவே கலையார்வம் கொண்ட தனது இரண்டாவது புதல் வனுக்குத்தான் அந்தப் பெண் பொருத்தமானவள் என்று தான் நினைத்தபடியே நடந்தது குறித்து மன்னன் மிகவும் மகிழ்ச்சி அடைந் தான். கூடவே, ''எனது இரண்டாவது புதல்வன் முதலில் திருமணம் புரிவதால், அவனது மனைவியே பட்டத்து ராணி ஆவாள்,'' என்று அறிவித்தான்.

இதைத்தான் அந்தப் பெண்ணின் தாயும் ஆரம்பத்திலேயே விரும்பி னாள். இவ்வாறு திருமணம் எல் லோரது விருப்பத்திற்கிணங்க நடந்து முடிந்தது.





# பட்டைத் தீட்டப் படாத வைரம்

கமலபுரத்தில் வித்யாநாதன் என்றொரு வாலிபன் இருந்தான். அவனுக்குத் தன் அறிவிலும், திறமையிலும் ஆழ்ந்த நம்பிக்கை இருந்தது.

ஆரம்பத்தில் சில நாட்கள் அவன் வேத ஆகமங்களைப் படித்துத் தேர்ந்தான். பிறகு இசை, மருத்துவம், சோதிடம் இப்படி ஒவ்வொரு கலையாக வெகு விரைவிலேயே கற்றுக் கொண்டு விட்டான். ஆனால் தான் கற்ற கலைகள் எதையும் நிபுணன் ஆகும் அளவுக்கு முழுமையாகக் கற்கவில்லை. இதனால் மற்றவர்கள் அவன் எதையுமே அரைகுறையாகக் கற்றவன் என்று அவனை கேலி செய்வதுண்டு. தன் மேல் உள்ள பொறாமையால் தான் மற்றவர்கள் தன்னை இவ்வாறு கேலி செய்கிறார்கள் என்று நினைத்த வித்யாநாதன், மற்றவர்கள் சொல்வதைப் பொருட்படுத்தவில்லை.

வித்யாநாதனுடைய இந்தக் குறையை நினைத்து அவனது பெற்றோர்கள் அவனது எதிர்காலத்தை நினைத்துக் கவலையுற்றனர்.

தன் மகனைப் பற்றி தங்கள் மனக் கவலையை அவனது சித்தியிடம் பகிர்ந்து கொண்ட போது சித்தியானவள், ''திருமணமானால் எல்லாம் சரியாகி விடும். எனக்குத் தெரிந்த பெண் பிரியம்வதா மிகவும் அழகானவளும், புத்திசாலியும் ஆவாள். தனது சாமர்த்தியத்தால் வித்யாநாதனை சரியான வழிக்குக் கொண்டு வந்து விடுவாள்,'' என்று நம்பிக்கை தெரிவித்தாள்.

அதை ஒப்புக்கொண்ட அவனது பெற்றோரும் திருமணத்திற்கு சம்மதிக்க, வித்யாநாதன் பிரியம்வதாவை மணந்தான். குடித்தனம் நடத்தத் தொடங்கிய சில நாட்களிலேயே பிரியம்வதா தன் கணவனைப் பற்றி நன்றாக அறிந்து கொண்டாள். தன் கணவன் மிகவும் புத்திசாலி என்பதில் சந்தேகமில்லை, ஆனால் அவனிடம் அளவுக்கு மீறி

வினய ரஸ்தோகி

தன்னம்பிக்கை இருக்கிறது என்றும், அதுவே அகந்தையாக மாறி அவன் முன்னேற்றத்தைக் கெடுக்கிறது என்றும் புரிந்து கொண்டாள்.

ஒருநாள் பிரியம்வதா குளத்திலிருந்து தண்ணீர் எடுக்கச் செல்லுகையில் தன் கணவனையும் கூட அழைத்தாள். செல்லும் வழியில் முட்புதற்களுக்கு அருகே ஓர் இளம் சிறுவன் பாம்பு கடித்து வாயில் நுரைதள்ள விழுந்து கிடக்கக் கண்டனர்.

வித்யாநாதன் சில இலைகளைப் பறித்து அவற்றை கசக்கி, அந்தச் சாறை விழுங்குமாறு செய்தான். சில நிமிடங்களிலேயே அந்தச் சிறுவன் சரியாகி விட்டான். இதைக்கண்டதும் பிரியம்வதாவிற்கு தன் கணவனது மருத்துவத் திறமையைப் பற்றி முழு நம்பிக்கை பிறந்து விட்டது.

இந்தச் சம்பவம் நிகழ்ந்த சில நாட்களில், பக்கத்து கிராமத்தில் நடந்த ஓர் இசை நிகழ்ச்சிக்கு பிரியம்வதா தன் கணவனுடன் சென்றாள். கச்சேரி முடிவதற்கு முன்னாலேயே, வித்யாநாதன் அந்தப் பாடகரின் பாட்டில் லயமும், நயமும் இல்லை என்று குறை கூறிக் கொண்டே எழுந்து கொண்டு விட்டான்.

வேறுவழியின்றி, பிரியம்வதாவுக்கு தன் கணவனுடன் வீடு திரும்ப நேரிட்டது. செல்லும் வழியில் தன் கணவனை ஒரு பாட்டுப் பாடச் சொன்னாள், வித்யாநாதனும் தனது இனிய குரலில் ஒரு பாட்டுப் பாடினான். உடனே பிரியம்வதா, ''இவ்வளவு இனிமையான குரல்



கொண்ட தாங்கள் ஏன் இசையை முழுமையாகக் கற்றுக் கொண்டு ஒரு வித்வான் ஆகக்கூடாது?'' என்று கேட்டாள்.

''என்னைவிட நன்றாகப் பாடக் கூடிய வித்வான் யாராவது இருந்தால் தானே இது நடக்கும்! அப்படி யாருமேயில்லை,'' என்றான் வித்யாநாதன்.

தனது கணவனின் அகந்தையை உணர்ந்து கொண்ட அவள் மௌனமானாள்.

மறுநாள் அவர்கள் வீட்டுக்கு, பிரியம்வதாவின் பெற்றோர்கள் பெண்ணுக்கும், மாப்பிள்ளைவீட்டாருக்கும் கொடுத்தனுப்பிய தின்பண்டங்களை எடுத்துக் கொண்டு ஒரு வேலைக்காரன் வந்திருந்தான். பிரியம்வதா அவனிடம் தன் பெற்றோருக்குக் கடிதம் எழுதிக் கொடுக்க நினைத்தாள்.

அவ்வாறே தன் பெற்றோருக்கு விவரமாக ஒரு கடிதம் எழுதி வைத்த பின் அவள் உறங்கி விட்டாள். தன் மனைவி கடிதத்தில் என்ன எழுதி யிருக்கிறாள் என்று தெரிந்து கொள்ள ஆசை கொண்ட வித்யாநாதன் அந்தக் கடிதத்தை இரகசியமாகப் படித்துப் பார்த்தான். அந்தக் கடித்தில் அவன் மனைவி பின்வருமாறு எழுதி இருந்தாள்.

''இங்கு எல்லோரும் நலம். என் கணவர் மிக அருமையான உணவு பதார்த்தங்கள் பறிமாறப் பட்ட ஒரு தலைவாழை இலையைப் போன்றவர். அந்த உணவு பதார்த் தங்கள் எவ்வளவு சுவையானவை என்பது உண்பவருக்கு மட்டும் தான் தெரியுமே தவிர அந்த இலைக்குத் தெரியாது. அதுபோல், ஏராளமான பல திறமைகளை தன்னகத்தே கொண்டவர் என் கணவர். அவருடைய திறமைகள் பட்டை தீட்டப்படாத வைரம் போல் அவருக் குள்ளேயே புதைந்து உள்ளன. என் கணவரும் ஒருநாள் தன் திறமைகளை வெளியுலகுக்கு எடுத்துக் காட்டும் பாக்கியம் கிடைக்க எங்களுக்கு ஆசீர்வாதம் செய்யுங்கள்'' என்று உருக்கமாக எழுதியிருந்தாள்.

அதைப் படித்த பிறகு வித்யா நாதனுக்கு அன்றிரவு உறக்கம் கொள்ளவில்லை. மறுநாள் தன் மனைவியிடம், ''பிரியம்வதா, நான் உன்னுடைய மனதைப் புரிந்து கொண்டேன். நீ என் கண்களைத் திறந்துவிட்டாய். திறமை இருந்த தால் தான், அன்று நான் அந்தச் சிறுவனை உயிர் பிழைக்கச் செய்தேன். ஆகவே முதலில் அந்த மருத்துவத் துறையில் முழுமையாக பிரகாசிக்க நல்ல ஒரு மருத்துவரிடம் பயிற்சி எடுத்துக் கொள்ளப் போகிறேன். அதுவரை நாம் பிரிந்திருப்போம்,'' என்று உணர்ச்சி பொங்கக் கூறினான்.

அதைக் கேட்டு அவன் மனைவி மட்டுமல்லாமல் அவனது பெற்றோர் களும் மகிழ்ச்சி அடைந்தனர்.

வித்யாநாதன் நல்லதொரு மருத்து வரிடம் ஓர் ஆண்டு பயிற்சி எடுத்துக் கொண்டு, ஒரு சிறந்த மருத்துவனாக மாறி திரும்பி வந்தான்.






# வாசகர்களுக்குக் கதைப் போட்டி

## சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

**கீழ்காணும் கதையைப் படியுங்கள்:**



இரண்டு பயணிகள் ஒருவரோடு ஒருவர் சாலையில் காரசாரமாக விவாதித்துக் கொண்டிருந்தனர். அவர்கள் விவாதம் சண்டையில் முடிந்து கை கலப்பு ஏற்படும் சமயம், சுற்றியிருந்தவர்கள் அவர்களை விலக்கி நீதிமன்றத்திற்கு அனுப்பினார்கள். ''இவன் என் வைர மோதிரத்தைப் பார்த்து விட்டுத் தருகிறேன் என்று கேட்டான். நானும் எனது மோதிரத்தைக் கழற்றிக் கொடுத்தேன். இப்போது இது தன்னுடைய மோதிரம் என்று சாதிக்கிறான்,'' என்று ஒருவன் புகார் செய்தான்.

இரண்டாமவன் நீதிபதியை நோக்கி, ''நீதிபதி அவர்களே, இந்த மோதிரம் என்னுடையது. நான் தான் என் விரலிலிருந்து கழற்றி இவனுக்குப் பார்க்கக் கொடுத்தேன்,'' என்றான்.

♦ அந்த மோதிரத்தை வாங்கிப் பார்த்த நீதிபதி ''அடக்கடவுளே! தொலைந்துபோன நம் மன்னன்னுடைய மோதிரமல்லவா இது! இதை யார் திருடினாரோ, அவனுக்கு மரண தண்டனை நிச்சயம். ஹும், இப்போது சொல்லுங்கள். யார் முதலில் இதைத் திருடியது?'' என்று கேட்டார்.

♦ அந்தப் பயணிகள் என்ன பதில் சொல்லியிருப்பார்கள் என்று உங்களால் ஊகிக்க முடிகிறதா? நீதிபதி எப்படி உண்மையைக் கண்டு பிடித்தார் என்பதையும் உங்களால் ஊகிக்க முடியுமா?

நீங்கள் உங்கள் விளக்கத்தை 100-150 சொற்களில் எழுதி ஒரு உறைக்குள் வைத்து உறைமீது கதைப் போட்டி என எழுதி அனுப்பவும். கீழே கொடுக்கப்பட்டுள்ள கூப்பனையும் சேர்த்து அனுப்ப வேண்டும்.

## முடிவு தேதி : ஏப்ரல் 30, 2004

பெயர் ------------------------------------வயது-----------பிறந்த தேதி-----------------

பள்ளியின் பெயர் ---------------------------------------------------------------------------

வகுப்பு-------------------------------வீட்டு முகவரி-----------------------------------------

-----------------------------------------------------------------------------------------------

--------------------------------------------------------------------பின்கோடு-------------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்

**சந்தமாமா இந்தியா லிமிடெட்**

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.



# தண்ணீர் ஊற்று

பிரம்மதத்தன் முன்பு காசியை ஆண்ட போது போதிசத்வர் சாத வாகன வம்சத்தில் பிறந்து வளர்ந்து பெரியவராகி ஐநூறு வண்டிகளை வைத்துக் கொண்டு வியாபாரம் செய்து வந்தார்.

ஒரு முறை அவரது குழு ஒரு பாலைவனப் பகுதியை அடைந்தது. அது அறுபது மைல் நீளமானது. பொடிமணல் சூடேறினால் காலைப் பொசுக்கி விடும். பகல் வேளையில் நெருப்பாய் கொதிக்கும் அந்தப் பாலைவனம் இரவில் சட்டெனக் குளிர்ந்துவிடும். நடுப்பகலின் போது அந்தப் பாலைவனத்தில் செல்லவே முடியாது.

எனவே அங்கு செல்லும் பயணிகள் தமக்கு வேண்டிய உணவுப் பொருள்களையும் குடி நீரையும் உடன் எடுத்துச் செல் வார்கள். கூடியவரையில் இரவில் பயணம் செய்து அந்தப் பாலை வனத்தைக் கடக்க முயல்வார்கள். இரவில் திசைகாட்ட நட்சத்திரங்களே அவர்களுக்கு உதவும்.

ஒரே இரவில் அந்தப் பாலை வனத்தைக் கடக்க முடியாவிட்டால் மறுநாள் காலையில் வண்டிகளை வட்ட வடிவில் நிறுத்தி மேலே கெட்டித் துணிகளைக் கட்டி அதன் நிழலில் பயணிகளும் மாடுகளும் தங்க ஏற்பாடு செய்து கொள்வார்கள். அங்கேயே நீர் குடித்தும் சாப்பிட்டும் அன்றையப் பகல் பொழுதைப் போக்கிவிட்டு மாலையானதும் மீண்டும் பயணத்தைத் துவக்கு வார்கள்.

அவர்கள் தம்மோடு போதிய அளவு நீரை எடுத்துப் போய் வந்ததால் அவர்களுக்கு எவ்வித சிரமமும் தோன்றாமல் இருந்து வந்தது.

போதிசத்வரும் இம்மாதிரியே பயணம் செய்து ஐம்பது மைல்

தூரத்தைக் கடந்து விட்டார். இன்னும் கொஞ்ச தூரமே இருந்ததால் ஒரு இரவில் கடந்து போய் விடலாமென எண்ணி தம்மிடம் மிகுந்த உணவை யும் நீரையும் கொட்டி விட்டு பயணத்தைத் தம் குழுவுடன் துவக்கினார்.

முதலில் செல்லும் வண்டியில் இருப்பவன் தான் நட்சத்திரங்களைப் பார்த்து திசை அறிந்து செல்லக் கூடியவன். மற்ற வண்டிகள் அவனது வண்டியின் பின்னால் செல்லும். மாலையில் கிளம்பிய அவன் சற்று நேரத்தில் தன்னையும் அறியாமல் தூங்கிவிட்டான்.

அதனால் அவனது வண்டி சற்று வளைந்து போய் பாதையை விட்டுத் திரும்பி மீண்டும் பாலைவனத்திற் குள்ளாகவே போகலாயிற்று. அதைப் பின் பற்றி மற்ற வண்டிகளும் சென்றன. முதல் வண்டிக்காரன் விடியும் வேளைக்குத்தான் கண் விழித்தான். அப்போது நட்சத்திரங் களைப் பார்த்து விட்டு தன் வண்டி போக வேண்டிய திசையில் போகா மல் நேர் எதிராக வந்த வழியே பாலை வனத்திற்குள் போய்க் கொண்டிருப் பதைக் கவனித்தான்.

உடனே அவன் தன் வண்டியைத் திருப்பி ''எல்லோரும் வண்டிகளைத் திருப்புங்கள். நாம் மறுபடியும் பாலைவனத்திற்குள்ளே வந்து விட் டோம்'' என்றான். வண்டிகளை எவ்வளவு வேகமாக ஓட்டியும் அவர்களால் பாலைவனத்தைக் கடக்க முடியாமல் முதல் நாள் காலையில் தங்கிய இடத்திற்குத் தான் போய்ச் சேர முடிந்தது. அங்கேயே தங்கி விடலாம். ஆனால் குடிக்க நீர் வேண்டுமே.



வண்டிகளை வட்ட வடிவில் நிறுத்தி கூடாரம் போடப்பட்டது. ஆனால் அன்று பகல் முழுவதும் எல்லோரும் அங்கே தங்கி இருக்க வேண்டும். வண்டி மாடுகளும் இருக்க வேண்டும். இவர்களுக்கு குடிக்க நீரும் உணவு தயாரிக்க நீரும் தேவை. என்ன செய்வது? எனவே கவலையுடன் இளம் வெயிலில் போதிசத்வர் சுற்றிப் பார்க்க சற்று தூரத்தில் தர்ப்பைப்புல் அடர்ந்து வளர்ந்து இருந்ததைக் கண்டார். நிலத்துக்குள் ஈரப்பசை இருந்தால் தானே அந்தப் பாலைவனத்தில் புல் வளர முடியும் என எண்ணி அந்த இடத்தைத் தோண்டச் சொன்னார். எல்லோருமாகச் சேர்ந்து தோண்டி னார்கள். இருபது அடி தோண்டியதும் பாறை தென்பட்டது.

இனி தண்ணீர் எங்கே இருக்கும் என எல்லோரும் சந்தேகப்பட்டார் கள். போதிசத்வரோ பாறை மீது காது வைத்துக் கேட்டு விட்டு ''இதன் அடியே நீர் இருக்கிறது. இதனைப் புரட்டி நகர்த்துங்கள்'' என்றார். பலருக்கும் அங்கே தண்ணீர் இருக்குமா என்ற சந்தேகமே ஏற் பட்டது. பாறை மிகப் பெரியதாக இருந்து அசைந்து கொடுக்கா விட்டால் என்ன செய்வது என்றும் கூறினார். ஆனால் போதிசத்வரோ ''முயன்றால் முடியாதது எதுவும் இல்லை'' என்று கூறி பாறையை நகர்த்தச் சொன்னார்.

அந்தக் கல்லைப் பெயர்த்து ஒருவன் நகர்த்தவே அந்த இடத்தி லிருந்து தண்ணீர் பீறிட்டு பனை உயரத்திற்குப் போய் கீழே விழுந்தது. எல்லோரும் மகிழ்ந்து போய் முதலில் தம் தாகத்தைத் தணித்துக் கொண்டு நீரைப் பாத்திரங்களில் எடுத்துப் போனார்கள். அதன் பின் கூடாரத்தில் சமையல் தயாராகியது. எல்லோரும் சாப்பிட்டு விட்டு மாலையானதும் அங்கிருந்து கிளம்பி நேர் வழியில் சென்றனர். தண்ணீர் வந்த இடத்தில் போதிசத்வர் ஒரு கம்பத்தை நாட்டினார்.

அயல் நாட்டில் தம் சரக்குகளை இலாபத்திற்கு விற்று போதிசத்வர் ஊர் திரும்பி வந்து தானதர்மங்களைச் செய்து சுகமாக வாழ்ந்தார்.





# மகாவிஷ்ணு

**பா**ற்கடலைக் கடையும் போது ராட்சஸர்கள் தேவர்களைக் கேலி செய்தவாறே பாம்பின் தலைப் பகுதியைப் பலமாகப் பற்றி இழுத்தார்கள். தேவர்களும் போட்டி போட்டுக் கொண்டு பலமாக இழுக்கவே மாபெரும் பாம்பான வாசுகி தன் பல தலைகளிலிருந்து கொடிய ஆலாகல விஷத்தைக் கக்கியது. இது கண்டு எல்லோரும் *சம்போ! மகாதேவா!!* எனச் சிவனாரைத் துதித்தார்கள்.

சிவனாரும் வந்து அந்தக் கொடிய விஷத்தைக் குடித்தார். விஷம் அவரது உடலைத் தாக்கக் கூடாது என நினைத்து தேவி அவரது கழுத்தைப் பலமாகப் பிடித்துக் கொண்டாள். அதனால் விஷம் அவரது கழுத்தோடு நின்று அப்பகுதியை நீல நிறமாக்கி விட்டது. அதனால் அவருக்கு நீலகண்டன் என்ற மற்றொரு பெயரும் ஏற்பட்டது.

அமிழும் மந்தர மலையைத் தாங்க தேவர்கள் விஷ்ணுவைப் பிரார்த்திக்க அவரும் பெரிய ஆமை வடிவை எடுத்து கடலில் நுழைந்து மந்தர மலையின் அடியில் போய் அதனைத் தம் முதுகில் தாங்கி கடல் மட்டத்திற்கு மேல் இருக்கச் செய்தார். இதனால் பால் கடலைக் கடைவது எளிதாயிற்று.

பாற் கடலிலிருந்து சந்திரன் இலட்சுமி, கற்பக மரம், காமதேனு, ஐராவதம், உச்சிரவஸ் என்ற குதிரை போன்ற பல அதிசயப் படைப்புகள் வெளி வந்தன.

முடிவில் பாற்கடலிலிருந்து அமிர்தம் வெளி வந்தது. விஷ்ணுவே ஆயுர்வேத வைத்திய முறையை ஏற்படுத்திய தன்வந்திரியின் உருவில்



அமிர்த கலயத்தை எடுத்துக் கொண்டு பல மூலிகைகளோடு தாமரை மலர் மீது அமர்ந்து கடலிலிருந்து வெளியே வந்தார்.

அமிர்தத்தை அடைய எவ்வளவு கஷ்டப்பட வேண்டியதாயிற்று! தன்வந்திரியின் கையில் இருந்த கலயத்தை ராட்சஸர்கள் கண்டு ''அது எங்களுக்கே சொந்தம்'' என்று பிடுங்கிக் கொண்டு விட்டார்கள். அது கண்டு தேவர்களோ அது தமக்கே சொந்தம் என்றார்கள். இப்படி அவர்கள் சச்சரவு செய்து கொண்டிருக்கையில் அங்கே அழகிய பெண்ணான மோகினி தோன்றினாள். அவளைக் கண்டு ராட்சஸர்கள் மதிமயங்கிப் போனார்கள்.

அப்போது மோகினி ''வீண் சண்டை எதற்கு? அந்தக் கலயத்தை என்னிடம் கொடுங்கள். நான் பகிர்ந்து கொடுக்கிறேன்'' என்று புன்னகை புரிந்தவாறே கூறினாள். ராட்சஸர்களும் அதற்குச் சம்மதித்து அமிர்த கலயத்தை அவளிடம் கொடுத்தார்கள்.

ராட்சஸர்களை ஒரு வரிசையிலும் தேவர்களை எதிர் வரிசையிலும் மோகினி உட்கார வைத்தாள். பின்னர் அவள் அமிர்த கலயத்தை எடுத்துக் கொண்டு குலுக்கி மினுக்கியவாறே அவர்களிடையே நடந்து வந்தாள்.

ராட்சஸர்கள் ஆவென வாயைப் பிளந்து கொண்டு அவளையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். தேவர்களும் அந்த மோகினி யாரெனத் தெரியாமல் திகைத்தனர். மோகினி அமிர்தத்தை முதலில் தேவர்களுக்கே கொடுத்துக் கொண்டு போனாள். அப்போது தேவர்களுக்கு விஷ்ணு தான் மோகினியின் உருவில் வந்திருக்கிறார் என்பது தெரிந்து விட்டது.

மோகினி ராட்சஸர்களை மயக்கி ஏமாற்றுகிறாள் என்பதை ராட்சஸர்களில் ஒருவனான ராகு கண்டு கொண்டான். அவன் ஜல ராட்சஸி சிம்ஹிகையின் மகன். அவன் தேவர்களில் ஒருவனைப் போல உருமாறி தேவர்கள் உட்கார்ந்த வரிசையில் போய் அமர்ந்தான். அவனுக்கும் அமிர்தம் கிடைக்கவே அதனைக் குடித்து விட்டான். இதனை கவனித்து விட்ட சூரிய சந்திரர்கள் விஷ்ணுவிடம் கூறி விட்டார்கள். விஷ்ணுவும் அப்போது பல உருவில் இருந்தார். மோகினி, ஆமை என்பதோடு எப்போதும் உள்ள உருவிலும் இருந்ததால் தம் சக்கராயுதத்தை ராகுவின் மீது விட்டார்.

ராகுவைத் துரத்தி அவனது தலையைத் துண்டித்தது. அமிர்தம் சாப்பிட்டதால் அந்தத் தலையும் உயிருடன் இருந்தது உடலும் உயிருடன் இருந்தது. தலைப்பகுதி ராகு எனவும் வால் பகுதி கேது எனவும் பெயர் பெற்று ஏழு கிரகங் களோடு சேர்ந்து இருக்கலாயின. அதனால் ராகுவும் கேதுவும் கூட கிரகங்களாகக் கருதப்பட்டன. மகா விஷ்ணுவிடம் தன்னைக் காட்டிக் கொடுத்த சூரியனையும் சந்திரனை யும் சில அமாவாசைகளிலும் சில பௌர்ணமி நாட்களிலும் ராகு துன்புறுத்தி வந்தான். இதுதான் சூரிய சந்திர கிரகணங்கள் என்று வழக்கில் சொல்லி வரலானார்கள்.

அமிர்தம் முழுவதும் தேவர் களுக்குக் கொடுத்த பின் மோகினி திடீரென மறைந்து விட்டாள். அப்போது தான் ராட்சஸர்களுக்குத் தாம் ஏமாந்து போனது தெரிந்தது. அதுமுதல் அவர்கள் விஷ்ணுவையும் தேவர்களையும் தம் கடும் பகைவர் களாக எண்ணி வரலானார்கள்.

மோகினி அழகிற்கே எடுத்துக் காட்டாக அமைந்தாள். நாரதரும் ஜெகன் மோகினி அவதாரத்தின் புகழ்பாடி தம் வீணையை மீட்டிய வாறே கைலாச லோகத்திற்குச் சென்றார். பார்வதிதேவி அதைக் கேட்டு ''அறியாமையில் இருந்த ராட்சஸர்களை மயக்கி ஏமாற்றி விட்டதால் மட்டும் மோகினி உயர்ந்தவளாகி விட்டாளா?'' என்று கேட்டாள். நாரதரும் ''ஆம் தாயே. யாரையும் கவர்ந்து இந்த உலகையே



காக்க வந்ததுதான் மோகினி அவதாரத்தின் நோக்கம். அதனால் அவள் உயர்ந்தவளே'' என்று கூறி விட்டுச் சென்றார்.

பார்வதிதேவி அது பற்றிச் சிவபிரானிடம் கூறினாள். சிவபெரு மானோ தலையை ஆட்டிப் புன்னகை புரிந்து விட்டுப் பேசாமல் இருந்தார். பின்னர் அவர் பார்வதிதேவியை அழைத்துக் கொண்டு நந்தி வாகனத்தில் ஏறி வைகுண்டத்திற்குச் சென்று'' நீங்கள் எடுத்த மோகினி உருவத்தை மறுபடியும் காண வேண்டும் என்று வந்திருக்கிறோம்'' என்றார்.

சற்று நேரத்திற்குப் பின் சற்று தொலைவில் பூச்செண்டுகளைத் தூக்கி எறிந்து விளையாடும் மோகினியை சிவபெருமானும் பார்வதியும் கண்டார்கள். சிவனார் தம்மை மறந்து அந்த மோகினியின்



பக்கம் ஓடினார். மோகினியும் அவரது பிடிக்கு அகப்படாமல் நகர்ந்து நகர்ந்து செல்ல, சிவபிரானும் அவளைப் பிடிப்பதற்காகக் கையை நீட்டியவாறே செல்லலானார். பார்வதிதேவி இதைக் கண்டு திகைத்து நின்றாள்.

சிவமோகினி லீலாவினோதத்தை முப்பத்து முக்கோடி தேவர்களும் அதிசயத்தோடு நின்று பார்த்தார்கள். நந்தி தேவரும் ஆடாமல் அசை யாமல் நின்றார்.

மோகினியும் சிவபிரானும் ஓடிக் கொண்டே இருந்தனர். பார்வதிதேவி கைலாசத்திற்குத் திரும்பி வந்தாள். மோகினியோ சிவபிரானை ஏழு உலகங்களிலும் தம் பின்னால் வரச் செய்து கைலாசத்திற்கே வந்தாள், தன்னை பிடிக்க முயன்ற சிவபிரானை அவ்வாறு செய்ய வேண்டாம் எனக் கூறி அவள் பார்வதியை நோக்கி ஓடினாள். ஆனால் சிவபிரான் அவளது இடையைப் பற்றி விட்டார். மறு நிமிடம் மோகினியின் உருவம் மறைய அந்த இடத்தில் மகாவிஷ்ணு நின்றார்.

பார்வதியும் விஷ்ணுவிடம் ''அண்ணா இது நீங்களும் என் கணவரும் சேர்ந்து நடத்திய லீலை இதை உலகம் உணரத்தான் உணரும்'' என்றாள். அப்போது நாரதரும் ''தேவி நீங்கள் கூறியது முற்றிலும் சரி'' எனக் கூறி வீணையை மீட்டி இனிய கீதங்களைப் பாடினார்.

சிவபெருமானும் ''இப்படிப் பட்ட மோகினியின் உருவ அழகில் ராட்சஸர்கள் மயங்கி மதி இழந்து அமிர்தத்தையே மறந்து போனது ஆச்சரியப்படத் தக்க விஷயம் அல்லதான்'' என்றார்.

விஷ்ணுவும் புன்னகை புரிந்த வாறே பார்வதியிடம் ''முன்பு நம் கங்காதேவி மேலுலகிலிருந்து பூலோகத்திற்குச் சென்ற போதும் சிவபிரான் இப்போது போலவே அவளது அழகில் மயங்கித்தான் தன் தலைமீது வைத்துக் கொண்டார் போலிருக்கிறது'' என்றார். இப்படி சற்று நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு அவர் வைகுண்டலோகத்தி ற்கு திரும்பிச் சென்றார்.

சில காலத்திற்குப் பின் விஷ்ணு கர்த்தமபிரஜா பதிக்கும் தேவஹூதிக் கும் மகனாகப் பிறந்து கபிலவதாரம் எடுத்தார். சிறு வயதிலேயே தவம்செய்து நல்லறிவு பெற்ற இந்த கபிலரைப் பின்னர் கபிலமகா முனிவர் என்று உலகமே போற்றிப்

புகழந்தது. கபிலர் தம் தாய் தேவஹூதிக்குக் கூறிய பல தத்துவ போதனைகள் தாம் சாங்கியயோகம் எனப்பெயர் பெற்று விளங்கியது. கபிலர் பாதாள லோகத்தில் எவ்வித இடைஞ்சலும் இல்லாமல் தவம் செய்து கொண்டிருந்தபோது தான் பூவுலகில் சகரன் என்ற சக்கரவர்த்தி தனது நூறாவது அசுவமேத யாகத்தைச் செய்யலானான். இந்திரன் தன் பதவி போய் விடுமோ எனப் பயந்து அந்த அசுவமேத யாகக் குதிரையைத் திருடிக் கொண்டு போய் கபிலர் தவம் செய்து கொண்டிருந்த இடத்தில் கட்டி விட்டுப் போய் விட்டான்.

சகரனின் ஆயிரம் புதல்வர்கள் யாகக் குதிரையைத் தேடிக் கொண்டு சென்றார்கள். பூமியைப் பள்ளம் தோண்டியவாறே அவர்கள் பாதாள லோகத்தை அடைந்தார்கள். அங்கே கபிலர் தவம் செய்து கொண்டிருந்த இடத்தில் அவர்கள் யாகக் குதிரையைக் கண்டார்கள். கபிலர்தான் குதிரையைத் திருடியவர் என அவர்கள் எண்ணி அவரைத் தாக்கினார்கள். அவர்தம் கண்களைத் திறந்து அவர்களைப் பார்க்கவே அந்த ஆயிரம் பேர்களும் எரிந்து சாம்பலாகி விட்டார்கள்.

சகரனின் பேரன் பகீரதன் எரிந்து சாம்பலாகிப் போன தன் முன்னோர்கள் நற்கதி அடைய மிகவும் முயற்சி செய்தபோது, விஷ்ணுவின் பாதங்களிலிருந்து தோன்றி மந்தாகினி என்ற பெயரில் சொர்க்கலோகத்தில் இருந்த கங்கை நதி பூமிக்கு வந்து அந்த எரிந்த



சாம்பலைக் கரைத்தால் தான் அது முடியும் எனத் தெரிந்து கொண்டான். ஆகவே அவன் கங்கையை நோக்கிக் கடுந்தவம் புரிந்தான்.

கங்கை தான் பூவுலகிற்கு வரத் தயார் என்றும் தன் வேகத்தைத் தாங்குபவர் யாராவது வேண்டுமே எனவே பகீரதன் சிவபிரானைக் குறித்துத் தவம் செய்து அவரை மகிழ்வித்து அவரிடம் கங்கையின் வேகத்தைத் தாங்கித் தருமாறு வேண்டிக் கொண்டான்.

கங்காதேவி மேலிருந்து கீழே வந்தபோது சிவபிரான் அவளது அழகைக் கண்டு அவளைத் தம் சடை முடியில் தாங்கி அதில் நிறுத்தி பலமாகக் கட்டி வைத்து விட்டார்.

பகீரதன் அவரிடம் வேண்டிக் கொண்டதன் பேரில் அவர் தம் சடை முடியைக் கொஞ்சம் அவிழ்த்து சிறிது கங்கை நீரை விட்டார். அது கங்கை நதியாகி பகீரதனின் பின்னால் சென்று அவனது முன்னோர்களின் சாம்பலின் மீது பாய்ந்து சென்று அவர்களை நற்கதி அடையும்படிச் செய்தது. சனகசனந்தாதி முனிவர்கள் எனப்படுவோர் நால்வர். அவர்கள் சனகர், சனந்தர், சனத் சுஜாதர், சனத்குமாரர் என்பவர்களாவர். எப்போதும் பாலர்களாக இருந்து விஷ்ணுவின் புகழ் பாடி எல்லா உலகங்களுக்கும் இவர்கள் போய் வந்தார்கள்.

அவர்கள் விஷ்ணுவைப் பார்க்க வைகுண்டத்திற்குப் போனார்கள். வைகுண்ட வாசலில் காவலாக நின்ற ஜெயனும் விஜயனும் அவர்களைத் தடுத்து நிறுத்தினார்கள். ஆனால் அவர்கள் அக்காவலாளிகளைப் பொருட்படுத்தாமல் நேரே விஷ்ணு சயனித்திருந்த அறையை நோக்கிச் சென்றார்கள். அப்போது காவலாளிகள் இருவரும் அவர்களைத் தடுக்கவே அவர்கள் ''நீங்கள் இங்கே இருக்கத் தகுதி பெற்றவர்களல்ல. ராட்சஸர்களாகப் பிறப்பீர்களாக'' என்று சபித்தனர்.

தலைவாசலில் ஏதோ சத்தம் ஏற்பட்டது கேட்டு அங்கே விபரீதம் ஏதும் நடந்து விட்டதோ என எண்ணி இலட்சுமி தேவி ஓடிவர, அவள் பின்னால் மகாவிஷ்ணுவும் வந்தார்.





# ஒரு கேள்விதான் கேட்கலாம்!

**ரா**மானந்தர் தம் குருகுலத்தை ஒரு அமைதியான இடத்தில் ஒரு ஆற்றின் கரையின் பக்கம் அமைத்திருந்தார். அக்குருகுலம் சிறந்தமுறையில் கல்வி அளிக்கிறது என்றும் அதில் பயின்று வந்தவர்களுக்கு எந்த நாட்டு மன்னரும் தயங்காமல் தம் தர்பாரில் வேலை போட்டுக் கொடுத்து விடுவார் என்றும் பெயர் பெற்றிருந்தது. அதனால் அந்த குருகுலத்தில் சேரப் பல நாடுகளிலிருந்தும் மாணவர்கள் முயல்வார்கள். அவர்களுக்கு அங்கு எளிதில் இடம் கிடைத்து விடாது. ராமானந்தர் குருகுலத்தில் சேர விரும்புபவர்களை நன்கு பரீட்சித்துப் பார்த்து திருப்தி அடைந்தாலே சேர்த்துக் கொள்வார்.

ஒருநாள் மாலையில் ராமானந்தரைக் காண பதினாறு வயது இளைஞன் ஒருவன் வந்தான். அவன் அவரது கால்களில் விழுந்து வணங்கி ''குருதேவரே! தங்களது குருகுலத்தைப் பற்றிக் கேட்டு அதில் சேர்ந்து கல்வி பெற நான் வெகு தொலைவிலிருந்து வந்திருக்கிறேன். உங்களிடம் பயின்று எல்லா சாஸ்திரங்களிலும் நல்ல தேர்ச்சி பெற விரும்புகிறேன். அதனால் என்னைத் தங்கள் சீடனாக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டிக் கொள்கிறேன் என்று பணிவுடன் கூறினான்.

ராமானந்தர் அந்த இளைஞனை இரண்டொரு நிமிடங்கள் உற்றுப் பார்த்தார். அந்த இளைஞனின் முகத்தில் அலாதியான ஒரு ஒளி வீசித் தம்மை வசீகரிப்பதை அவர் உணர்ந்தார். மிகவும் பணிவுடன் அவன் எழுந்து கை கட்டிக் கொண்டு நின்ற அவனைப் பார்த்து ''என் குருகுலத்தில் யாரையும் சேர்த்துக் கொள்வதற்கு முன் அவனை நன்கு பரீட்சித்துப் பார்ப்பேன் என்பது உனக்குத் தெரியுமல்லவா? நான் இப்போது உனக்கு ஒரு சிறு பரீட்சை வைக்கப் போகிறேன். நான் கேட்கும் கேள்விகளுக்கு நான் திருப்தி

- ஜிதேன் ஆர்ய -

அடையும் விதத்தில் நீ விடை கூறினாலே நீ அந்தப் பரீட்சையில் தேர்ந்து விட்டாய் எனக் கருதுவேன்'' என்றார்.

இளைஞனும் ''குருதேவரே! கேள்விகளைக் கேளுங்கள் நான் விடைகளைக் கூறுகிறேன்'' என்று சற்றும் தயங்காமல் கூறினான். ராமானந்தரும்'' சரி சாதாரணக் கேள்விகளாக பத்து கேட்கட்டுமா அல்லது கடினமான ஒரு கேள்வியை மட்டும் கேட்கட்டுமா?'' என வின வினார். இளைஞனும் ''கடினமான ஒரே கேள்வியை மட்டும் கேளுங்கள். அதற்கு நான் விடை அளித்து வெற்றி பெறுகிறேன்'' உங்களைப் பத்து கேள்விகளை கேட்கச் சொல்ல அதற்கு விடை அளித்து உங்கள் பொன்னான நேரத்தை வீணாக்க விரும்பவில்லை. ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறே பதம் பார்க்கப் போதும் என்பதுபோல ஒரு கேள்வி யின் பதிலை கொண்டு என் திறமை யைத் தாங்கள் அறிந்து கொண்டு விடலாம்'' என்றான்.

அப்போது ராமானந்தர் ''நான் கேட்கும் அந்த ஒரே கேள்விக்கு உடனே பதில் சொல்ல வேண்டும். கேள்வி இதுதான். விதை முதலில் வந்ததா அல்லது மரம் முதலில் வந்ததா?'' என்று கேட்டார். இளைஞனும் சற்றும் தயங்காமல் மரமே முதலில் வந்தது,'' என்று விடை கூறினான். அதைக் கேட்ட ராமானந்தர் ''இது தான் சரியான விடை என்பதை நீ எந்தக் காரணத் தைக் கொண்டு கூறினாய்?'' என்று கேட்டார்.

அப்போது அந்த இளைஞன் ''மன்னிக்க வேண்டும் குருதேவரே! இப்போது தாங்கள் கேட்பது இரண்டாவது கேள்வி. தாங்கள் ஒரு கேள்வியை மட்டுமே கேட்பதாகக் கூறினீர்கள். அதனால் இந்த இரண்டா வது கேள்விக்கு நான் விடை அளிப்பது முறையல்ல என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்றான்.

அதைக் கேட்டுத் திகைப்பும் ஆச்சரியமும் அடைந்த ராமானந்தர் புன்னகை புரிந்து அந்த இளைஞனின் கூரிய அறிவைப் பாராட்டி அவனை உடனேயே குருகுலத்தில் சேர்த்துக் கொண்டார்.



# என் இனிய நண்பனே!





ஓர் ஊரில் ஒரு விவசாயியின் வீட்டில் கிஜேலா என்ற பெயர் கொண்ட அனாதைச் சிறுமி வீட்டு வேலைகளைச் செய்து வந்தாள். மூன்று வேளை உணவு மட்டும் அளித்து அவளை அந்த விவசாயி தன் வீட்டிலேயே வைத்துக் கொண்டிருந்தான். ஏதோ இந்த மட்டும் உண்ண உணவும், வசிக்க இடமும் உள்ளதே யென்று, கிஜேலா அந்த விவசாயி தம்பதிகளிடம் மிகவும் நன்றியுடன் இருந்தாள்.

ஒருநாள் அந்த விவசாயியின் மனைவி "கிஜேலா, பசுவிடமிருந்து பால் கறந்து கொண்டு வா," எனக் கூற, கிஜேலாவும் பால் கறக்கச் சென்றாள். அவ்வாறு செய்து கொண்டிருக்கையில், கிஜேலாவின் பின்புறத்திலிருந்து "உஸ்ஸ்..." என்று ஒலி வந்ததைக் கேட்டு, கிஜேலா திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். அங்கே அவள் கண்ட காட்சி அவளை பயத்தில் உறைய வைத்து விட்டது.

அவள் முன்னால் ஒரு பெரிய நாகப்பாம்பு படம் எடுத்துக் கொண்டு நின்றது. அதன் தலையில் கண்ணைப் பறிக்கும் ஒளியுடன் ஒரு தங்க மகுடம் இருந்தது. 'கிறீச்' சென்று கத்த நினைத்த கிஜேலா, தன்னை சமாளித்துக் கொண்டு அந்த நாகத்தை உற்றுப்பார்த்தாள். தனக்கு தாகமாயுள்ளது என்று தன் கண்களால் அது கெஞ்சுவதைப் போல் தோன்றவே, கிஜேலா பால் பாத்திரத்தை சட்டென்று அதன் முன் வைக்க, அந்த நாகமும் அந்த பாத்திரத்திலுள்ள பாலையெல்லாம் நிதானமாக உறிஞ்சிக் குடித்தது. குடித்து முடித்தவுடன் கிஜேலாவை நோக்கி நன்றியுடன் பார்த்து விட்டு சரசரவென்று அந்த நாகம் மறைந்து விட்டது.

ஒரு கணம் செயலிழந்து திகைத்து நின்ற கிஜேலாவுக்கு திடீரென்று பயம் ஏற்பட்டது. "அடடா, எஜமானி பால் எங்கே என்று கேட்டால் என்ன செய்வது?" என்று



யோசிக்கையில் கிஜேலாவின் உடல் எல்லாம் பயத்தில் நடுங்கியது. ''அடியே கிஜேலா, என்ன செய் கிறாய்? கறந்த பாலை இந்த பெரிய பாத்திரத்தில் ஊற்றி விட்டுச் செல்'' என்று எஜமானி கட்டளையிட கிஜேலா பயத்தில் கால்கள் தடுமாற நடந்து சென்று காலி பால் பாத்திரத் தைக் கவிழ்த்தாள். என்ன ஆச்சரியம்? எவ்வளவு பால் கறந்திருந்தாளோ, அதைப் போல் மூன்று மடங்கு அதிகமாக காலிப்பாத்திரத்திலிருந்து பால் கொட்டியது.

இதைப் பார்த்த எஜமானியும் ஆச்சரியப்பட்டு, ''அடி கெட்டிக்கார பெண்ணே! இனிமேல் நீதான் தினமும் பால் கறக்க வேண்டும்'' என்று எஜமானி கட்டளையிட்டாள்.

''ஐயோ, அம்மா, வேண்டாம். என்னைப் பால் கறக்கச் சொல்லா தீர்கள். அங்கே... அங்கே...'' என்று நாகத்தினைப் பற்றி சொல்ல முயன்ற சிறுமியை, இடைமறித்து ''அதெல் லாம் முடியாது. நீதான் பால் கறக்க வேண்டும்,'' என்று சொல்லி எஜமானி சென்று விட்டாள்.

மறுநாள் பால் கறக்கச் சென்ற கிஜேலா முன், மீண்டும் தங்க மகுடம் அணிந்த நாகம் வந்தது. முன் தினத்தைப் போலவே, அன்றும் கிஜேலா அன்புடன் பால் அளிக்க, அதை அருந்தி விட்டு நாகம் திரும்பிச் சென்றது. அதேபோல், காலிப் பாத்திரத்திலிருந்து மூன்று மடங்கு பால் கொட்டியது. இப்படி தினமும் கிஜேலா பால் கறக்கச் செல்லும் போது நாகம் வருவதும், பால் அருந்துவதும் வாடிக்கையாகி விட்டது.

பல ஆண்டுகள் சென்றன. கிஜேலா இப்போது பருவமடைந்து பெரியவளாகி விட்டாள். நாகத்திற்கு பால் அளிக்கும் நிகழ்ச்சி மட்டும் தொடர்ந்து கொண்டேயிருந்தது. விவசாயியும், அவன் மனைவியும் கிஜேலா பருவமடைந்து விட்டதால் அவளை யாராவது நல்ல பிள்ளைக்கு திருமணம் செய்வித்து அவளுக்கு புதிய வாழ்க்கையைக் கொடுக்க முனைந்தனர். இறுதியில் அவர்களு க்குப் பிடித்த, கிஜேலாவுக்கும் விருப்பமான ஒரு மணமகன் கிடைத் தான். அவன் மிக ஏழையாயிருந் தாலும், நல்லவன் என்றும் பொறுப் பானவன் என்றும் தெரியவந்தது. கிஜேலாவின் திருமண ஏற்பாடுகள் மும்முரமாக நடந்து திருமணத்திற்கு நாளும் குறிக்கப்பட்டுவிட்டது.

திருமணம் முடிந்தவுடனே கிஜேலா தனது புதிய வீட்டுக்கு மண மகனுடன் சென்று விடுவது என்றும் தீர்மானம் ஆயிற்று.

அன்றுதான் கிஜேலா தன் எஜமானரின் வீட்டில் வசிக்கும் இறுதி நாள். மறுநாள் அவளது திருமணம் நடக்கவிருந்தது. வழக்கப் படி அன்றும் கிஜேலா பால் கறக்கும் போது, அவளது தோழனான நாகம் தனது தங்க மகுடத்துடன் வந்தது. நாகத்திற்கு பாலை அளித்தவாறு, கிஜேலா அதை நோக்கி "என் இனிய நண்பனே! பல ஆண்டுகளாக இணை பிரியாது இருந்தோம். ஆனால் இன்று தான் இறுதியாக நான் உனக்கு பாலமுது தந்து உபசரிக்க முடியும். நாளை முதல் நான் வேறு வீடு சென்று விடுவேன். என் கணவராக வரப் போகிறவர் மிகவும் ஏழை. எங்களால் இனிமேல் இப்படி உன்னை உபசரிக்க முடியாது. ஆனால் உன்னை நான் என்றென்றும் என் நினைவில் வைத்திருப்பேன்," என்று கூறி கண்ணீருடன் விடை கொடுத்தாள். மறுநாள் கிஜேலாவின் திருமணம் அமர்க்களப்பட்டது. ஏராளமான கிராம மக்கள் கூடி இருந்தனர்.



திடீரென்று எங்கிருந்தோ வந்தது கிஜேலாவின் தோழனான அந்த நாகம். அனைவரும் திகைத்துப் போயிருக்கையில், அந்த நாகம் சரசரவென மணப்பெண்ணை நோக்கி விரைந்து, தன் தலையை இத்தனை நாள் அழகு செய்த அந்தத் தங்க மகுடத்தை அவள் மடியில் உதறிப் போட்டது. தன் கண்களால் அவளுக்கு திருமண வாழ்த்துக்களைச் சொல்லி, திருமணப் பரிசாக தன் சார்பில் அளித்த தங்க மகுடத்தை மணப்பெண்ணை ஏற்றுக் கொள்ளு மாறு அறிவித்து, வந்த வேகத்தி லேயே திரும்பிச் சென்று விட்டது. தனது தோழனின் அன்பினைக் கண்டு, கிஜேலாவின் கண்களி லிருந்து ஆனந்தக் கண்ணீர் வழிந்தது.

அதுமட்டுமல்ல , கிஜேலாவின் மனக்குறையை மனதில் வைத்துக் கொண்டோ என்னமோ, அது கொடுத்த வரத்தினால் கிஜேலாவின் பணப்பையிலிருந்து எப்போது எடுத் தாலும் பொற்காசுகள் வந்து கொண்டேயிருந்தன. இவ்வாறு அந்த ஏழைச் சிறுமி கிஜேலா தன்பால் காட்டிய அன்புக்குப் பிரதியாக அவளது தோழன் கிஜேலாவை மிகவும் பணக்காரியாக மாற்றியது. நன்றி மறக்காத கிஜேலா, நாகத்துடன் தோழமையை தொடர்ந்ததுடன் தன் பழைய எஜமானருக்கும் மற்றும் பலருக்கும் வேண்டிய உதவிகளை செய்தாள்.



# மந்திரக்கனி

பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன், ஒரு முனிவர் தவம் புரிந்து கொண்டிருக்கையில், ஒரு தேவதை அவர் முன் தோன்றினாள். ''முனிவரே, உங்களுடைய தவம் கண்டு மகிழ்ச்சியுற்றேன். இந்த மந்திரக்கனியைப் பெற்றுக் கொள்ளுங்கள். இதைக் கையில் வைத்துக் கொண்டு நீங்கள் எதை விரும்பினாலும், உங்களுக்கு அது கிடைக்கும்,'' என்று கூறி மறைந்தாள்.

முனிவருக்கு உலகில் எப்பொருளின் மீதும் ஆசையில்லை. இதைப் பொதுமக்களின் நன்மைக்குப் பயன் படுத்தலாம் எனக் கருதி, அந்த நாட்டு மன்னனிடம் சென்றார். முனிவரைக் கண்ட மன்னன் மகிழ்ச்சியடைந்து அவரை வரவேற்று அவர் வந்த விஷயத்தைப் பற்றிக் கேட்டான்.

''மன்னா, இது ஒரு மந்திரக்கனி. இதற்குரிய விலையைக் கொடுத்து யார் இதை வாங்குகிறார்களோ, அவர்களுடைய விருப்பங்களில் ஒன்று நிறைவேறும். அவ்வாறு நிறைவேறியபின், அதை மற்றொருவருக்குத் தான் வாங்கிய விலையை விடக் குறைந்த விலையில் விற்று விடவேண்டும். தன்னுடைய விருப்பம் நிறைவேறியபின், இந்தக் கனியை வாங்கியவர் ஒரு வாரத்திற்கு மேல் தன்னிடம் வைத்திருக்கக் கூடாது. அப்படி வைத்துக் கொண்டால், அவருக்கு பெருத்த அபாயம் ஏற்படும். முதலில் உங்களுக்கு இந்தப் பழத்தைக் கொடுக்கிறேன். தங்களது நீண்ட நாளைய நிறைவேறாத ஒரு விருப்பத்தை இதன் மூலம் பூர்த்தி செய்து கொள்ளுங்கள்,'' என்று கூறி முனிவர் பழத்தினை மன்னனுக்குக் சமர்ப்பித்தார்.

மன்னனுக்குத் தன் நெடுநாள் விருப்பம் திடீரென ஞாபகம் வந்தது. இந்தக் கனியின் மூலம் பக்கத்து நாட்டு மன்னனைப் போரில் வென்று விடலாம் என்ற எண்ணத்துடன், ஆயிரம் பொற்காசுகள் கொடுத்து

- 25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை -



அதை வாங்கிக் கொண்டான். மன்னனிடமிருந்து கிடைத்த பொற் காசுகளை ஏழை எளியவர்களுக்கு தானம் வழங்கிவிட்டு, முனிவர் மீண்டும் காட்டுக்குச் சென்று தவம் புரியலானார்.

அந்த மந்திரக்கனியின் உதவியால், மன்னனது விருப்பம் நிறைவு பெற்றது. மீண்டும் போர் தொடங்கிய போது, இம்முறை போரில் மன்னன் வென்றான். பக்கத்து நாட்டு மன்னன் உடைய நாட்டையும் தன் ஆதிக்கத் தின் கீழ் கொணர்ந்தான்.

வெற்றியடைந்த பிறகு, அவை யில் எல்லா குடிமக்கள் முன்பு, அந்த மந்திரக்கனியின் மகிமையை எடுத் துரைத்த மன்னன், அதை வாங்க விரும்புவர்களை அழைத்தான். நீண்டநாளாக உடல் நலக்குறை வாயிருந்த ஒரு நோயாளி அதை ஐநூறு பொற்காசுகள் கொடுத்து வாங்கிக் கொண்டு விட்டான்.

இப்படியாக அந்தக் கனி பல கைகள் மாறிக் கொண்டேயிருந்தது. கனியின் பெருமை வளர வளர, கைகள் மாறமாற, அதை விற்கும் விலையும் குறைந்து கொண்டே வந்தது.

இப்படி சில ஆண்டுகள் சென்றன. புருஷோத்தமன் என்பவன் நோய் வாய்ப் பட்டிருந்தான். மந்திரக் கனியைப் பற்றி கேள்விப்பட்ட அவன், அதை வாங்க நினைத்தான். இப்போது அதன் விலை இரண்டு காசுகள் மட்டுமேயிருந்தது. அவனு டைய மனைவி மாலினி அதை

இரண்டு காசுகள் கொடுத்து வாங்கி, தன் கணவன் குணமாக வேண்டிக் கொண்டாள். அதன்படியே, புருஷோத்தமனும் விரைவில் குண மடைந்தான்.

இப்போது மாலினி பெரும் சங்கடத்திற்கு உள்ளானாள். இதை ஒரு பைசாவுக்கு யாரிடமாவது விற்றால், வாங்குபவன் அதை விட குறைந்த விலைக்கு எப்படி விற்க முடியும்? ஆகவே வரும் ஆபத்தைத் தானே அனுபவிக்கலாம் என்று கனியை தன்னிடமே வைத்துக் கொண்டாள். வரப்போகும் ஆபத்தை நினைத்து நினைத்து, அவளுக்கு உடல் நலம் குன்றியது.

எஜமானியின் நிலையை கவனித்த வேலைக்காரன் ஒருநாள், ''அம்மா, உங்களுக்கு உடல்நிலை சரியில்லை யா?'' எனக் கேட்க, ''நான் இனி அதிக நாள் உயிருடன் இருக்க மாட்டேன்'' என்று கூறி, மந்திரக்கனியின் விவரங்களைக் கூறினாள்.

''நீயே சொல். இந்தக் கனியை யாரிடம் விற்பேன்? யார் வாங்கி னாலும் அவர்களது விருப்பம் நிறை வேறிய பிறகு ஒரு வாரத்திற்குள் ஒரு காசுக்கும் குறைவாக இதை மற்றொருவரிடம் விற்றுவிட வேண்டும். இல்லையெனில் அவனுக்கு ஆபத்து உண்டாகும். இதைவிட நானே இறந்து போகி றேன்,'' என்றாள். ''நீங்கள் கவலைப் படாதீர்கள் அம்மா! நான் உங்களிட மிருந்து ஒரு காசு கொடுத்து வாங்கிக் கொள்கிறேன்,'' என்றான். ''பைத்தி யமே, உன்னுடைய ஆசை நிறை வேறிய பின், நீ எப்படி அதை விற்பாய்?'' என்று கேட்டாள் மாலினி.

''எனக்கு ஏதாவது ஆசையிருந்தால் தானே, அந்த கஷ்டம் வரும்! எனக்கு எந்தவித ஆசையும் கிடையாது. யாருக்கு எந்த வித ஆசையும் இல்லையோ, அவர்களுக்கு எந்தவித ஆபத்தும் இல்லை.

நான் இதை வைத்துக் கொள்கிறேன்,'' என்று கூறி ஒரு காசு கொடுத்துவிட்டு கனியை வாங்கிக் கொண்டான். அதை தன் வீட்டில் ஒரு மரப் பெட்டியினுள் மறைத்து வைத்து விட்டான். அதற்கப்புறம் அந்தக்கனி என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. ஆனால் அந்த வேலைக்காரனுக்கு ஆபத்து எதுவுமே ஏற்படவில்லை.



# சூர்யா

9

வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

சாந்திபுரத்து மன்னர் எங்கு இருக்கிறார் என்று தெரியாததால், அந்த நாட்டு மக்கள் குழப்பத்தில் ஆழ்ந்திருக்கிறார்கள். பட்டத்து ராணியும் மறைந்து விட்டாள். குழந்தை இளவரசன் ஜெயானந்த முனிவரின் பாதுகாப்பில் இருக்கிறான். முனிவர் ஜெயானந்தரின் காவலரிடம் இளவரசரை பாதுகாக்கும் பொறுப்பை விட்டுச்செல்கிறார்.

ஓவியம் : காந்தி அய்யா

முனிவர் செல்வதற்காக எழுந்து நின்றார்.

இப்போதுள்ள நிலைமைக்குக் காரணமானவர்கள், வாழ்க்கையில் அதன் பலனை அடைவார்கள்.

நான் இதை பத்திரமாக வைத்துக் கொள்கிறேன் சுவாமி.

மன்னர் எங்கோ பத்திரமாக இருக்கிறார் என்று என் உள் மனம் சொல்கிறது.

அவர் மீண்டும் வெளிவந்து, சாந்திபுரத்தின் அமைதியை நிலைநாட்டுவார் என்று நம்புகிறேன்.

அது வரை நான் என்ன செய்ய வேண்டும்?

''நடக்கும் விஷயங்களில் கவனம் செலுத்தி, இன்னும் சிலநாட்கள் பொறுமையாக இருக்க வேண்டும்.''

இதற்குள் சாந்திபுரத்தில் வீரசிம்மன் அரசு அதிகாரத்தைத் தன் கையில் எடுத்துக் கொள்கிறான்.

அமரசிம்மா! நமது குடிமக்களின் கவனத்தை திசை திருப்ப வேண்டும். நமது அண்டை நாடுகளுடன் போர் தொடுப்போமா?

அமிருத புரியின் மீது படையெடுப்போம் தலைவா. அங்கே அரசர் பிரேமநாதர் தனது மகளையும், இளைவசனையும் இழந்து விட்டதால், நோய்வாய்ப் பட்டுள்ளார்.

அமரசிம்மன் வீரர்களுடன் போர் தொடுப்பது பற்றி ஆலோசனை செய்கிறான்.

அடுத்த நாள் வீரசிம்மன் கூடாரத்தில்...

நாம் எப்போ அமிருதபுரி செல்கிறோம்?

என்னுடைய கத்தி ரத்தம் கேட்கிறது.

மாறு வேடத்தில் மறைந்திருந்த வசந்தனை அவர்கள் கவனிக்க வில்லை. வசந்தன் அவர்கள் பேசுவதை கவனிக்கிறான்.

அமிருத புரியின் மீது

நான் உடனே அமிருதபுரிக்கு விரைந்து செல்லவேண்டும்.

வெளியிலிருக்கும் ஒரு போர் வீரனது குதிரையைக் கவர்ந்து, அதன்மீது ஏறிப் பயணம் ஆகிறான்.


அமிருதபுரியில் வசந்தன் சாந்திபுரத்தின் முன்னாள் அமைச்சர் மானவேந்திரரை சந்திக்கிறான்.
வசந்தா, சாந்திபுரத்திலிருந்து ஏதாவது தகவல் உண்டா?
ஐயா, வீரசிம்மன் அமிருத புரியின் மீது படை யெடுத்து வரத்திட்டம் தீட்டியுள்ளான்.''
நாம் உடனே மன்னரிடம் சொல்வோம்.


மானவேந்திரருடன் அமிருதபுரியின் படைத்தலைவரும் சேர்ந்து செல்கிறார்கள்.
மேகநாதன் நமது படைகளைத் தயார் நிலையில் வைத்திருக்கிறான், அரசே!
அரசே, எங்கள் ரத்தத்தின் கடைசிச் சொட்டு வரை சிந்திப் போராடுவோம்.
அவர்களால் அவ்வளவு எளிதாக நமது நாட்டுக்கு வர முடியாது. நந்தினி ஆறு நமக்கு உதவி புரியும்.


பௌர்ணமி இரவு. சாந்திபுரத்துப் படைகள் நந்தினி ஆற்றைக் கடக்கும் முயற்சியில் இறங்குகின்றன.

திடீரென புயல் அடிக்கத் தொடங்குகிறது.

ஆற்றில் வெள்ளம் கரைபுரண்டு ஓடுகிறது

படகுகள் ஆற்று வெள்ளத்தில் தத்தளிக்கின்றன.

ஐயோ, என படகு நீரில் மூழ்குகிறது.

மற்ற வீரர்கள் எங்கே?”

காப்பாற்று. நாங்கள் தண்ணீரில் மூழ்குகிறோம்.

போர்வீரர்களின் படகுகள் மூழ்குகின்றன. பல வீரர்கள் இறக்கின்றனர். மன்னர் பிரேமநாதர் கூறியது பலிக்கிறது.

இந்த முயற்சி பயனில்லை.

வா அமரசிம்மா! நாம் நம் நாட்டுக்குத் திரும்புவோம்.

தொடரும்

# எரிவாயு சிக்கனம்

வீணாவின் தாத்தாவும் பாட்டியும் வீணாவின் வீட்டிற்கு ஒரு மாதம் தங்க வந்திருந்தனர். வீணா தன் விடுமுறையை எப்படி கழித்தாள் என்று பாட்டி கேட்க, வீணா எரிவாயு சிக்கனம் பற்றி தான் கற்றுக்கொண்ட விஷயங்களை பாட்டியிடம் கூறினாள். அதைக் கேட்ட பாட்டி 'வீணா எரிவாயுவை சிக்கனப் படுத்த இன்னும் ஒரு வழி இருக்கிறது. அதை நீ மட்டுமல்ல, உங்கள் குடும்பத்தில் எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டும்' என்றாள். அது என்ன என்று வீணா கேட்க, பாட்டி கூறப்போகும் விஷயத்தைக் கேட்க, வீணாவின் பெற்றோர்களும் தயாராயினர்.



தொடர்ந்து பாட்டி சொன்னாள். ''நிறையக் குடும்பங்களில், எல்லோரும் ஒன்றாய் சேர்ந்து சாப்பிடுவதில்லை. ஒவ்வொருவரும் ஏதோ சில காரணங்களினால் தனித்தனியாக சாப்பிட வருகிறார்கள். இதனால் ஒவ்வொரு முறையும் உணவை சூடுபடுத்த வேண்டியுள்ளது. இதனால் எரிவாயு வீணாக செலவழிவது மட்டும் அல்லாமல், உணவில்உள்ள சில சத்துப் பொருட்களும் வீணாகின்றன. எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து உணவருந்தினால் எரிவாயு சிக்கனம் மட்டுமல்லாமல், குடும்ப ஒற்றுமையும் மகிழ்ச்சியும் அதிகமாகும். அப்படி சிலசமயங்களில் முடியவில்லை என்றாலும், உணவுப் பொருட்களை மீண்டும் சுடவைப்பதை விட 'கேஸ்ரோல்' எனப்படும் குடுவையில் வைத்தால் சூடு ஆறாமல் இருக்கும். மீண்டும் சுடவைக்கும் தேவையும் இருக்காது,'' என்றாள்.

இப்படியாக வீணாவின் குடும்பத்தினர் அனைவரும் எரிவாயு சிக்கனம் பற்றி பல உபயோகமான விஷயங்களைத் தெரிந்து கொண்டனர்.

## உங்கள் விஞ்ஞானம்

### கடலிலுள்ள உப்பு

''கடல் நீர் ஏன் உப்புக்கரிக்கிறது?'' என்ற கேள்விக்கு நாட்டுக் கதைகள் சிலவற்றில் கடலுக்கும், காற்றுக்கும், மேகங்களுக்கும் நடந்த சண்டையில் ஏற்பட்ட உப்பு கடல்நீரில் கலந்தது என்றும் படித்திருப்பீர்கள். ஆனால் உண்மை என்ன தெரியுமா? மலைகளில் உருவாகும் நதிகள் பாறைகளிலுள்ள தாது உப்புக்களைக் கரைத்து சமவெளிகளில் பாயும்போது தன்னுடன் எடுத்துக் கொண்டு, கடலில் கலக்கும் சமயம், உப்பினையும் கலக்க செய்து விடுகிறது.

கடல்நீர் சூரிய வெப்பத்தால் நீராவி யாகும் போது, கரைந்த உப்பு மட்டும் கடலிலேயே தங்கி விடுகிறது. அதனால் கடல்நீர் உப்புக்கரிக்கிறது. இந்த உப்பினை கடல் நீரிலிருந்து பிரித்து எடுக்க, முதலில் கடல் நீர் தனியே கால்வாய் மூலம் வெளியில் கொண்டு வரப்பட்டு, இதற்காகக் கட்டப் பட்டிருக்கும் பாத்திகளில் இவை தேக்கப் படுகிறது. இந்த நீர், வெப்பத் தினால் மெதுவாக நீராவியாகி மறைந்து விட, உப்பு மட்டுமே தங்குகிறது. இந்த உப்பு சுத்தப்படுத்தி, சமையல் உப்பாக விற்பனை செய்யப்படுகிறது.



## உங்கள் சுற்றுப்புறம்



### பாலையிலும் வளரும் பசுஞ்செடிகள்

தாவரங்கள் உயிர் வாழ தண்ணீர் மிகவும் அவசியம். ஆனால் பாலை வனங்களில் பெரும்பாலான இடங்கள் நீர்ப்பசையே இல்லாமல் வறண்டு கிடக்கும். இப்படிப்பட்ட பாலை வனத்தில் கூட சப்பாத்தி கள்ளி போன்ற தாவரங்கள் வளருகின்றன. இவற்று க்கும் உயிர் வாழத் தண்ணீர் அவசியம் தான். ஆனால் பாலைவனத்தில் இவை எப்படி தண்ணீர் பிரச்சினையை சமாளிக் கின்றன? இந்த பாலைத் தாவரங்களுக்கு இலைகள் கிடையாது. ஆனால் இவற்றின் அடர்ந்த தண்டுப் பகுதி எப்போதாவது பெய்யும் மழையில் பெறும் தண்ணீரை சேமித்து வைத்தக் கொள்கின்றன. இதை வைத்துக் கொண்டு, இவை நீண்டகாலம் தாக்குப் பிடிக்க முடியும். தவிர இந்தத் தாவரங்களின் வேர்கள் அகலமாகப் படர்ந்து நிலத்திலிருந்து தன்னால் முடிந்த அளவு தண்ணீரை உறிஞ்சி எடுத்துக் கொள்கின்றன.

# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## உங்களுக்குத் தெரியுமா?

### ஊர்வன இனத்து அரக்கர்கள்

ஆழமான நதிகள், அடர்ந்த காடுகள், அவற்றினருகேயுள்ள சேறும் சகதியும் நிறைந்த இடங்கள் ஆகியவையே முதலைகளுக்குப் பிடித்த வசிக்கும் இடங்கள் ஆகும். ஊர்வன இனத்தைச் சேர்ந்த உயிரினங்களில், தற்போது உயிர் வாழும் இனங்களில் மிகப்பெரியது முதலைதான்.

முதலைகளில் 23 இனங்கள் உண்டு என்று கண்டுபிடித்துள்ளனர். அவற்றுள் மிகப்பெரியது 'எஸ்டுவரின்' எனப்படும் உப்புநீரில் வாழும் முதலைதான்.

20 அடிக்கும் மேல் வளரக்கூடிய இந்த முதலை, ஒரு டன் எடை இருக்குமாம். ஈரமான சகதியில் நதிக்கரையில் தன் கூரிய பற்கள் தெரிய வாயைப் பிளந்து



கொண்டு தன் இரையைத் தேடி காத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தாலே பயங்கரமாக இருக்கும்.

முதலைக்கு தண்ணீரில் வசிப்பதுதான் பிடித்தமானது என்றாலும், தரையிலும் வசிக்க முடியும். ஆற்றங்கரையினில் கிடைக்கம் சிறு பறவைகள், மிருகங்கள், நீர்வாழ் ஆமைகள் ஆகியவையே முக்கிய உணவு என்றாலும், கரடிகளையும், ஆடுமாடுகளையுங் கூடத் தாக்கித் தின்றுவிடும் சக்தி இதற்கு உள்ளது.

## அறிவு வளர

### இந்தியாவின் முக்கிய இடங்கள்

1. 'கார்பா நடனம்' எந்த மாநிலத்திற்குச் சென்றால் காண முடியும்?





2. 'ஜாராவா,' 'சென்டினலீஸ்' ஆகிய பழங்குடி மக்கள் எந்த மாநிலத்தில் வசிக்கின்றனர்?

3. 1930ம் ஆண்டு தென்னிந்தியாவில் உப்பு சத்யாகிரகத் திற்காக புகழ் பெற்ற ஊர் எது?





4. வெண்கல முகம் பார்க்கும் கண்ணாடி, எந்த மாநிலத்தில் காண முடியும்?

5. எந்த மாநிலத்தில் 'பிஹு' திருவிழாக்கள்' கொண்டாடப்படுகின்றன? அந்தத் திருவிழாக்களின் பெயர்கள் என்ன?



(விடைகள் 66ம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி



**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



NARAYANA MURTY TATA



NARAYANA MURTY TATA

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு ஜூன் 2004 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

**பிப்ரவரி 2004 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி வெற்றவர் :**

**ராசிகா**

த/பெ திரு ராமன்,
இராயகிரி,
திருநெல்வேலி மாவட்டம் - 627764.

பரிசு பெற்றவை





அன்பிற்காக ஏங்கும் நெஞ்சம்,
அன்பில் நனையும் நெஞ்சம்.

## 'அறிவு வளர?' விடைகள் (பக்கம் 64)

1. குஜராத்.
2. அந்தமான் மற்றும் நிகோபர் தீவுகள்.
3. வேதாரண்யம்.
4. கேரளாவின் ஆரன்மூலா.
5. அஸ்ஸாம், மாக் பிஹு, கட்டி பிஹு, போஹக் பிஹு.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)

